இடைச்சொல்லின்பெயர், அம்-ஆம் தம் நம் நும்-எ-அல்-வான்பாக்கு இவ்-எம்-எம் மன் பனன்-உம்-ஆக-௰௬-சாரியையின்பெயர், அம்-இற்று-அற்று-அத்து-அல்-இல்-அன்-ஆனஐதம் நுய்-அகு-ஆக-௰௩. ௰எ

கரமொடுகரனேகாரங் காட்டியவகரமென்ப
தாமுறவெழுத்துக்கேற்ற சாரியைநான்கேசாற்றுங்
கருதிடிலையேயாலே குவ்வொடின்னதுவேகண்ணே
விரவியவிளியன்றேழும் வேற்றுமையுருபினுமமே

எழுத்தின்சாரியையின்பெயர், கரம்-கான்-காரம்-அகரம்-ஆக-௪-வேற்றுமையுருபின்பெயர், ஐ-ஆல்-கு-இன் அது கண் விளி-ஆக-எ. ௰அ

என்னைசொலெவனேயாதே யிவையைக்கிளவிநாற்பே
ருன்னிடலவ்வேயிவ்வே யுவ்வொடுமூன்றுஞ்சுட்டா
மன்னியயாண்டும்பாங்கு மற்றிடத்தையுறற்சொ
லென்னிளிவேயேசிச்சி யேளநமிகழ்ச்சியாமே

ஐயச்சொல்லின்பெயர், என்னே-கொல்-எவன்-யாது-ஆக-௪-சுட்டின்-பெயர், அ-இ-உ-ஆக-௩-இடத்தையச்சொல்லன்பெயர், யாண்டு-யாங்கு ஆக-உ-இகழ்ச்சியினபெயர், என்-இளி ஏயே சிசி-ஏளநம்-௫ ௰௯

உலவியவிஞ்சைவித்தை யூதியஞ்சாலமோ
கலைபுடனுறுதிகேள்வி யிருநான்குங்கல்வியின்பேர்
நலமுறக்கெழுமல்கற்ற னவிலலேபயிலும்பேர்
பலமுறவோதலின்பேர் பாடமைபாடலாமே

கல்வியின்பெயர், விச்சை வித்தை-ஊதியம்-சாலம்-ஓதி-கலை- உறுதி-கேள்வி-ஆக-அ-கற்றலின்பெயர், கெழுமல் நவிலல்-பயிலல்-ஆக-௩-ஓதலின்பெயர், பாடமையாடல்-க. உ௰

ஆதிநாலெழுகாக்கேள்வி யாரணமோத்துச்சாகை
யேதமில்சுருதிதன்னொ டிருக்கிவையேழும்வேதம்
வேதநூற்பொருளினும்ம விதித்திடுஞானபாகை
யாதியாங்கருமபாகை யருத்தபாகையுமாமென்ப.

வேதத்தின்பெயர், ஆதிநால்-எழுகாக்கேள்வி-ஆரணம்-ஓத்து-சாகை சுருதி-இருக்கு-ஆக-எ வேதநூற்பொருளின்பெயர், ஞானபாகை - கரும பாகை-அருத்தபாகை-ஆக-௩. உக

மெய்தெரியாரணந்தான் வேதத்தின்ஞானபாகை
மையிலுட்பொருளினும மற்றுபரிடதமென்ப

வைதிகம்வேதமுற்ற மார்க்கமேபார்க்குங்காலை
யையமிலிருக்கினோடு பௌடிகமாதிவேதம்.

வேதத்தின்ஞானபாகையின்பெயர், ஆரணம்-க-வேதத்துட்பொருளின்பெயர், உபநிடம்-க-வேதமார்க்கத்தினபெயர், வைதிகம் - ஆதிவேதத்தின்பெயர், இருக்கு-பௌடிகம்-ஆக-உ. உஉ

எமமாம்பிரண்டாம்வேத மிசைதைத்திரியத்தோடுந்
தொழிலாயசுவாமென்று சொல்லுவர்நல்லநாலோர்
காமமேமூன்றாம்வேதந் தகைபெருகீதஞ்சாரும்
வாமமார்நான்காம்வேத மதர்வணம்வகுக்குங்காலே.

இரண்டாம்வேதத்தின்பெயர், தைத்திரியம்-யச்சு-ஆக-உ- மூன்றாம்வேதத்தின்பெயர், சாமம்-அதுகீதநடையுள்ளது, நான்காம்வேதத்தின்பெர் அதர்வணம்-க. உ௩

தந்துணைபுனைந்துரைத்தால் சார்ந்தபாயிரத்தினோடு
முந்தியபதிகமேநூன் முகமுகவுரையுமப்பே
ரந்தமாகமத்தோ டாரிடப்பிடகமற்றுத்
தந்திரம்பனுவலோடு சமயஞ்சூத்திரமும் நூற்பேர்.

நூன்முகத்தின்பெயர், தந்துணை-புனைந்துரைத்தல் - பாயிரம்-பதிகம்-முகவுரை-ஆக-ரு நூலின்பெயர், ஆகமம்-ஆரிடம் - பிடகம்- தந்திரம்-பனுவல் சமயஞ்-சூத்திரம்-ஆக-எ. உ௪

படலமேசருக்கங்கண்டாம் பரிச்சேதமத்தியாய
மிடரறுமிலம்பகங்க ளான்முடியிருமுப்பேரே
தொடையடிவரையொன்றின்றிச் சூத்திரங்குறித்தயாப்பாம்
படிபுகின்றநூற்பா வகவலைப்பகருங்காலை.

நூன்முடியின்பெயர், படலம்-சருக்கம்-காண்டம்-பரிச்சேதம்- அத்தியாயம்-இலம்பகம்- ஆக-கூ சூத்திரயாப்பின்பெயர், நூற்பாவகவல் க. உரு

நேரினமணியையோர்ந்து நிரல்படவைத்திட்டாங்கே
யோரினப்பொருளையாய்ந்திட் டொருவழிவைப்பதோத்தாம்
யாருமோர்நெறியேயன்றி யருத்தங்கள்விராச்சிறந்த
பாரியபொருட்சொற்றானே படர்வதுபடலமென்ப.

ஓத்தென்பது, ஓரினப்பொருளை யொருவழிவைப்பதுபடலமென்பது, ஒருநெறியேயன்றி யருத்தங்கள்விராய்ப்பொருட்சொற்றொடர்வது. உ௬

சருக்கத்தின்முடிவுமற்றுஞ் சாரிலம்பகத்தினீற்றல்
விருத்தமாநடையேயாரும் வெற்றிசைப்பரவிநாமம்
விரித்துரையதனினோடு மெய்யனயுரைப்பொருட்போ
பெருத்திடும்பொழிப்பொலுஞ்சொற்பிண்டமாக்கொண்டுகூறும்.

வேற்றிசைப்பாவென்பது, சருக்கமுடிவினு மிலம்பகத்திற்றினும் விருத்தநடையது உரைப்பொருளின்பெயர், விரித்துறை பெய்ப்புறை-ஆக-உ-பொழிப்பென்பது விண்டமாகக்கொண்டுகூறுவது உஎ

புலத்தினைத்தருவகாய பதிகம்பலவகைப்பொருட்க
டிலகமோயாகிக்காணத் தொகுதிசெய்திடுவதாகும்
மிலக்கியமெடுத்துகாட்ட லிதிகாசமுதாரணப்பே
ரலக்கண்டீர்ஞாபகந்தா னரும்பொருள்பிசியுமாமே.

பதிகமென்பது, பலவகை-பொருட்கள்-விளக்கமாகிக்காணத்தொகுதி செய்வதுஉதாரணத்தின்பெயர், இலக்கியம்பெடுத்துக்காட்டல்- இதிகாசம் ஆக-௩-அரும்பொருளின்பெயர், ஞாபகம்-பிசி-ஆக-உ உஅ

காட்டியபாப்புத்தூக்குக் கவிசெயுள்கவிதைபாவே
பாட்டெனப்படும்வெண்பாவிற் படும்பெயர்வெள்ளைமுற்பாச்
சூட்டியேவகவலுக்குத் தொகையுமாசிரியமும்பேர்
முட்டியமுறட்கலிப்பாமுடிகியலராகமாமே.

பாட்டின்பெயர், யாப்பு-தூக்கு-கவி-செய்யுள்-கவிதை-பா-ஆக-௬-வெண்பாவின்பெயர், வெள்ளை-முற்பா-ஆக-உ அகவலின்பெயர்-தொகை-ஆசிரியம்-ஆக-உ-கலிப்பாவின்பெயர், முறள்-க இராகத்தின்பெயர், முடுகியல்-க உகூ

குற்றெழுத்துத்தொடர்ந்த செய்யுளேகுலகமென்ப
விற்றெனவிருபத்தாரே யெழுத்துநான்கடியுமாகி
யற்றதுசந்தப்பட்டா மதின்மிகலுவந்தநாமஞ்
சற்றேனுமருங்குநல்ல தாண்டகமென்பதாமே-

குலமென்பது, குற்றெழுத்துத்தொடர்ந்தசெய்யுள் - சந்தபாட்டென்பது,இருபத்தாறெழுத்து நான்கடியாகவருவது தாண்டமென்பது, இருபத்தாறெழுத்தின் மிக்குவருவது. ௩௰

கற்றறியெழுத்தையென்னுங் கணக்கெனச்சொல்லுநாமஞ்
சொற்றிடுங்கானமோடு சூழ்ந்திடுங்கனிதமெண்ணு
மற்றுறுபெயரெழுத்து வடிவுதன்மயெலுழுத்தா
மொற்றின்பேர்புலுதமாய்த்த மொடுதனிநிலைமெய்ப்புள்ளி

கணக்கின்பெயர், எழுத்து-எண்-ஆக-உ, எண்ணின்பெயர், நாணம்-கணிதம்-ஆக-உ - எழுத்தாவண - வடிவெழுத்து தன்மையெழுத்து-ஒற்றின்பெயர், புலுதம்-ஆய்தம்-தனிநிலை-மெய்-புள்ளி ஆக-௫. ௩௧

வரிஇராகம்பண்கேய மண்விளிகொளையிசைநெடு
பரவுகந்திருவங்கீதம் பாணிகாமரம்பாட்டேபக்
கமவியபாலையாழே நிலவியகுறுஞ்சியாழே
மருங்குசெய்யுளிசையென்ன வருநாலிசைசுநாற்பன்.

பாட்டின்பெயர், வரி-இராகம்-பண்-சேயம்-விளி-கொளை-கந்திருவம்-கீதம்பாணி-காமகம்-ஆக-௰ நாற்பண்ணின்பெயர், பாலையாழ்-குறிஞ்சியாழ்-மருதயாழ்-செவ்வழியாழ்-ஆக-௪. ௰௨

நிறைந்திடுமராகத்தோடு நேர்திறமுருப்புமற்றைக்
குரங்கலியாசானைந்துங் குறித்தபாலைத்திரங்கள்
பனைந்தனைவளங்காந்தாரம் படுமலைமருளயிர்ப்புச்
செறிந்தபஞ்சரமேயாற்றச் செந்திரங்குறிஞ்சியென்ப.

பாலையாழ்த்திரங்களின்பெயர், அராகம் நேர்திரம் உருப்பு - குருங்கலின்-ஆசான்-ஆக-௫-குருஞ்சியாழ்த்திரத்தினபெயர், நைவளம்-காந்தாரம்-படுமலை-மருள்-அயிராப்பு பஞ்சரம்-ஆருஞ்-செந்திரம் ஆக-௭. ௰௩

தளாவறுபேரியாழே சகோடையாழ்மருதயாழே
வளையுஞ்செங்கோட்டியாழே மற்றைநால்வகையாழ்ப்பேராங்
கலையருகுரலேதுத்தங் கைகிளையுழையினோடே
யிளியொடுவிளரிதாரா மெண்பகரேழிசையினாமம்.

நல்வகையாழியின்பெயர் * பேரியாழ்-சகோடையாழ்-மருதயாழ்-செய்கோடியாழ்-ஏழிசையின்பெயர், குரல்-துத்தம்-கைக்கிளை-உழை-இளிவிளரிதாரம். ௰௪

குரன்மிடராகுந்துத்தங் கூருநாக்கிளையேயண்ணஞ்
சிரமுழையிளியேநெற்றி சேர்ந்திடும்விளரிக்கஞ்சாந்
தாரமுளதாரநாசி தனித்தனிபிரக்குமென்னப்
பொருவிலாவாதிமூர்த்தி புலவருக்குறைத்தவாரே.

ஏழிசைபிறப்பிடங்களின்பெயர், குரல்-மிடரு-துத்தம்-நா-கிளை-அண்ணம் உழை-சிரம்-இளி-நெற்றி-நெஞ்சு தாரம்-நார-ஆக-௰௪. ௰௫

நான்கொடுநான்குமூன்று நலம்பருமிரண்டினோடு
நான்குமூளவிரண்டினோ நல்லமாத்திரைகலாகு
மாக்குள் ஆ ஈ ஊ ஏ ஓ ஔ வெண்ணுமேழுந்
தீங்கிலாவக்கரங்கள் செப்புமேழிசைகுநாதனே

ஏழிசைக்குமாத்திரைகளாவன குரல் ௪ கிளை-௩ உழை ௨-இளி ௪ விளரி ௩-தாரம்-௨-ஏழிசைகரங்களின்பெயர், ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ-ஔ. ()

---

* பேரியாழிற்குநரம்பு ௨௧-சகோடையாழிற்கு-௰௬-மகரயாழிக்கு செங்கோட்டியாழிட்கு-௭.

கால்கிலர்மௌவன்முல்லை கடம்பொடுவஞ்சிநெய்தன்
மேலுளவிளாயுன்னை விரும்பியமணங்களேழாம்
பாலொடுதேன்கடாமே பகர்தயிர்நெய்யினோடே
யேலமேவாழையேதா டிமக்கனியேழ்சுவைக்காம்.

ஏழிசைமணங்களின்பெயர், மௌவல்-முல்லை-கடம்பு-வஞ்சி - நெய்தல்-விளா-புன்னை-என-ஏழிசைச்சுவைகளின்பெயர், பால்-தேன்- தயிர்-நெய்-ஏலம்-வாழை-தாடி-மக்கனி-ஆக-அ. ௰௭

வண்டொடுகிள்ளைவாசி மதயானைதவளைதேனு
வொண்டிறலாடென்றேழு மேதுமேழிசையிலோசை
திண்டிறல்விஸ்வாமித்திரன் யமனங்கிதிங்கள்வெய்யோன்
கண்டசொற்கௌதமன்சீர் காசிபனிசமாமே.

ஏழிசையோசையின்பெயர், வண்டு-கிள்ளை-வாசி-மயானை-தவளை- தேனு-ஆடு-என-ஏழிசையீசரின்பெயர், விஸ்வாமித்திரன்- இயமன் - அங்கி-திங்கள்-வெய்யோன்-கௌதமன்-காசிபன்-என. ௰௮

கருதுமந்தரத்தினோடு காகுளிமந்தவோசை
மருவியமந்தத்தோடு மத்திமஞ்சமனிசைப்பே
ரானுறுதாரநீண்ட வுச்சமேவல்லிசைப்பேர்
குரலினுக்குலித்தாய்நின்ற கூருமாசான்றிறங்கள்.

மந்தவோசையின்பெயர், மந்தரம்-காகுளி-ஆக-உ - சமனிசையின்பெயர், மந்தம்-மத்திமம்- ஆக-உ-வல்லிசையின்பெயர், தாரம்-உக்கம்-ஆக-உ குரலினுக்குரியபடுமலைப்பாலைமுதலியதிரமேழும்*பாலையாழ்த்திறனும்.

துளையிரண்டென்பவெள்ளை தோறுஞ்செந்துளைகலாகு
கிளைநரம்பதுவேகூட னிகழும்பண்ணுகுமென்ப
குளைநரம்பதுதிரங்க வென்பதுகூரும்யாழு
னுளையுமின்னிசையேழாலே யோதியநூலின்பண்பாம்.

---

* கிரமேழாவனபடுமலைப்பாலை-செவ்வழிப்பாலை-செம்பாலை-விரிப்பாலை கொடிப்பாலை-மேற்செம்பாலை-அரும்பாலை-என்பன.

துளையிரண்டின்பெயர், வெள்ளை சேர்துளை-உ-பண்ணென்னும்பெயர், கிளைநரம்பிற்று திரமென்னும்பெயர், குளைநரம்பிற்றுயாழுனெழு மின்னிசையின்பெயர், ஏழாள். ௪௰

இன்னிசைக்குழலினாம மேற்றவங்கியமேவாரி
கின்னரம்வீணையின்பேர் கிளத்தியதண்டுமாகு
மன்னியயாழ்ப்பேர்கோட வதியொடுவிடஞ்சியாகு
முன்னிபகருவியோடு மொழிந்திடுங்கலமுமப்பேர்.

இன்னிசைக்குழலின்பெயர், வங்கியம்-க. வீணையின்பெயர், வாரி-கின்னரம்-தண்டு-௩-யாழின்பெயர், கோடவதி-விடிஞ்சி-கருவி-கலம்-ஆக-௪.

வரும்பிரமாணந்தன்னில் வலிக்கட்டுத்திவவென்றோதுந்
திரும்பியமுருக்காணிப்பேர் சேரிமாடகமொன்றுமே
நரம்பின்பேகுரலோகோலோ துயரியோடின்னுமுப்பேர்
புரிந்ததந்திரியுமப்பேர் போதன்முன்புகன்றவாறே,

யாழ்வலிக்கட்டின்பெயர், திவவு-க-முறுக்காணியின்பெயர்-மாடகம்-க-நரம்பின்பெயர்-குரல்-கோ-துயரி-தந்திரி-ஆக-௪. ௪௨

அரவமேகலனேயோதை யாகுலமாரவாரஞ்
சுருதிகோடணைபுலம்பு தொனியியந்துழனியோசை
யுளையிசையிடியேநாத மிளைத்தகோசணையேபாட்ட
யிளைசும்மைவகுனிமூவே ழிவைகளேயொலியுநாம.

ஒலியின்பெயர், அரவம்-கலன்-ஓதை-ஆகுலம்-ஆரவாரம்-சுருதிகோடணை-புலம்பு-தொனி-இயம்-துழனி-ஓசை-உளை-இசை-இடி-நாதம்-கோசணை-காட்டு-இளை-சும்மை-வகுனி-ஆக-௨௧. ௪௩

தெவிரலேமுரலன்முக்கல் சிற்றுதல்பயிலம்வேறு
குளிறலேநறவலோடு குருமித்தனெளிதர்சாலப்
பிளிரலேபத்தும்போதப் பிரற்றலுமெடுத்தலோசை
யுளையுமாஞ்சிலையொலிப்பே ருறுமருமராஞ்சமாமே.

எடுத்தலோசையின்பெயர், தெளிறல்·முறலல் முக்கல் சிரற்றுதல்-பயிலல்.குளிறல்-கறலல்-குருமித்கல் கெளிர்கல்-பிளிரல்-பிரற்றல் - ௨௰ ஆக-௰௨-சிலையொளியின்பெயர், மருமராஞ்சம்-௧. ௪௪

சிரற்றலேதொனித்தலோடு தெழித்தலேகுமிரல்விம்ம
லுரற்றலேயரற்றல்வேறு முழைத்தலேயுளைத்தலேங்க
லிறைத்தலேஇரட்டல்சால விடித்தலேயிமிழ்த்தலோடு
குறைத்தலேமுழக்கல்விசிக் குளிறலேயிசைத்தலோடு.

ஒலித்தலின்பெயர், சிரத்தல்-தொனித்தல்-செழித்தல்·குமிரல்·விம்மல்-உற்றல் அற்றல்-உழைத்தல்-உளைத்தல்·ஏங்கல் இறைத்தல்- இரட்டல்-இடித்தல்-இமித்தல்·குறைத்தல்-முழங்கல்-குளிறல்-இசைத்தல்-௰௮.

சிலும்பலேயியம்பலோடு சிதைத்தலேதுவைத்தல்கூடி
யலம்பலேகரங்கள்சீறி யழுக்கலேகழுங்கலோடு
சிலும்பலேகலித்தல்போதத் தெவிட்டலேகனைத்தலோடே
யுலம்புதல்புலம்பலென்னுன் கிவையொலித்தலின்பேரொன்ப.

சிலம்பல்-இயம்பல்-சிதைத்கல் துவைத்தல்-அலம்பல்-கறங்கல்- அழுங்கல்-கழுங்கல்-சிலும்பல்·கலித்தல்-தெவிட்டல்-கனைத்தல் - உலம்புதல்-புலம்புதல் ஆக-௰௪. ௪௫

இம்மெனக்கல்லென்றிட்ட டிழுமெனல்வல்லென்றிட்டல்
பொம்மெனலொல்லென்றிட்டல் பொள்ளெனநேரேலென்றிடடல்
கொம்மெனல்விடேலென்றிட்டல் குறிப்பொடுமுகலென்றிட்டல்
லம்பெனல்சரேலென்றிட்ட லநுகரணந்திரோசை.

அநுகரணவோசையின்பெயர், இம்மெனல்-கல்லெனல்- இழுமெனல்-வல்லெனல்-பொம்மெனல்-ஒல்லெனல்- பொள்ளெனல் - நேரேலெனல்-கொம்மெனல்·விடேலெனல்-முகேரெனல் அம்மெனல்சரேலெனல்௰௫.

படபடென்றொலித்தசாலப் பதபதகளகளென்றல்
மொடுமொடென்றிட்டல்வேறு மொகமொககொள்களென்ற
திடுதிடென்றிட்டலோடு நெவநெடநெறுநெறென்றல்
கடகடகலகலென்றல் கருதியவுடயவோசை.

உபயவோசையின்பெயா, படபடடெனல்-பதிபதெனல்-மொடுமடனல் மொகமொகெனல்-திடுதிடெனல் நெடநெடனல்- நெறுநெறனல் - கடக டெனல்-கலகலெனல்- ஆக-௰௧. ௪௮

பூசலேதமரமற்றுப் பொருந்தியகுமுறலரர்ப்புக்
கோசனையுளம்பலோடு கோடணைகோலாகாலம்
வீசியகலகம்வேறு மிகவுளறுதமெழித்தல்
பேசுமாகுலமொன்றல்லாப் பேரொலியீராரும்பேர்.

ஒன்றலாப்பேரொலியின்பெயர், பூசல் தமரல்-குமுறல்- ஆர்ப்பு யோசனை-உலம்பல்-கோடணை-கோலாகாலம் கலகம்- ஊறுதல்-தெழித்தல்-ஆகுலம்-ஆக-௰௪. ௪௯

திமிர்தலேயெடுத்துவந்த திமிலமேகளகலங்கள்
குமுதமேபேரொலிப்பேர் கூப்பிடலலரல்கத்தல்
கமையிலாதழைக்கலாகுங் கதறலுமான்தெழித்த
லமைவரவுரப்பல்சிறி யதிர்த்திடலதட்டிலின்பேர்.

பேரொலியின்பெயர், திமிர்தல்-திமிலம்-களகளம்-குமுதம்- ஆக-௪-கமையிலாதழைத்தலின்பெயர்,கூப்பிடல்-அலறல்-கத்தல்-கதறல்-ஆக-௪-அதட்டலின்பெயர், தெழித்தல்-உரப்பல்-அதிர்த்திடல்-ஆக-௩. ௫௰

இறந்ததுநிகழ்வுமற்றை யெதிர்வுமாம்புராணஞ்செய்தோ
னறந்தருகுணபத்திரன்ற ளரனெனச்சரணமானேன்
மறந்தலேப்படாதவினை மன்னன்மண்டலவன்செய்தான்
சிறந்திடுமோலிப்பற்றும்பேர் செயுளொன்றையைந்திரட்டி.

௰-வது, ஒலிபற்றியபெயர்த்தொகுதி

முற்றுப்பெற்றது.

---

ஆக - தொகுதி - ௰ - க்கு - விருத்தம் - ௭௩-௪.

உ

கடவுள் துணை.

மண்டலபுருடன் அருளிச்செய்த.

சூடாமணி

# பதினோராவது நிகண்டு

என்கிற

ஒருசொற்பலபொருட்பெயர்த்தொகுதி

மூலமும் உரையும்.

இஃது

சரவணபுரம்

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.

புரசபாக்கம்.

எழுமலைப்பிள்ளை அவர்களது

விவேகவிளக்க அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

—(*)—

1896.

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

உ

கடவுள் துணை.

ஒருசொற்பல பொருட் டொகுதியாகிய

# பதினோராவது நிகண்டு.

மூலமும் - உரையும்.



காப்பு.

முடிவிலின்பத்துமூவா முதல்வனைப்போற்றிசெய்தே
வடிதொறுமிரண்டுமொன்று மாதியிற்பொருளடக்கி
நடைபெறுக்ககரமாதி னகாவீறெதுகையாகப்
படியிலோர்சொற்பொருட்பல் விதத்தொகைபகாலுற்றும்.

இதன்பொருள்.

முடிவில் அளவில்லாத, இன்பத்து இன்பத்தையுடைய, மூவா-கெடாத, முதல்வனை-அருகக்கடவுளை, போற்றிசெய்து-துதிசெய்து, அடிதொறும்-அடிகடோறும், இரண்டு-இரண்டுசொல்லினும், ஒன்றும்-ஒருசொல்லினும், ஆதியில்-முதலில், பொருள்-பொருள்களை, அடக்கி - அமைத்து, நடைபெறு-நடைபெற்றுவரும், ககரமாதி-ககாவெதுகைமுதல் னகாவீறெதுகையாக-னகாவெதுகையிறுதியாக, படியில்-இவ்வுலகின்கண், ஓர்சொற்பொருட்பல்விதத்தொகை- ஒருசொற்பலவகைப்பொருட்டொகுதியை, பகாலுற்றும்சொல்லலுற்றும்-எ-று.

ககரவெதுகை.

விருத்தம்.

பகவனேயீசன்மாயோன் பங்கயன்சினனேபுத்தன்
பகலேநாளொருமுகூர்த்தம் பகலவனடுவேதேசு
மகரமேசுறாப்பூர்தாதாம் வசிகூர்மைவசியம்வாளே
யகமனமனையேபாவ மகலிடமுள்ளுமாமே.

(இ-ள்) பகவனென்பது, சிவனுக்கும் திருமாலுக்கும் - பிரமனுக்கும்-அருகனுக்கும்-புத்தனுக்கும்பெயர், பகலென்பது, நாள்ஒருமுகூர்த்தகாலம்-சூரியன் நடுப்பிரகாசத்துக்கும்பெயர், மகரமென்பது, சுறா பூர்தைக்கும்பெயர், வசியென்பது கூர்மை-வசியம்-வாளுக்கும்பெயர், அகமெனபது, மனம் வீடு-பாவம்-இடம்-உள்ளுக்கும்பெயர்-எ-று.

சிகரிகோபுரமலைவெற்புச் சிறைவிந்தைகாற்பேர்
சிகழிகைமயிர்முடிப்பேர் சிறந்தவாசினைதேமாலை

சிகரமேமலையிருச்சி திரைசென்னிதிவலைவெற்பாம்
மகம்யாகமோர்நாளென்பமாயென்பமறைவுஞ்சாவும்.

(இ-ள்) சிகரியென்பது, கோபுரம்-மலை-எலி-நாரைக்கும்பெயர், சிகழிகையென்பது, மயிர்முடி-சேர்க்கபாலை-பூமாலைக்கும்பெயர், சிகரமென்பது, மலையிருச்சி - ஆலை தலை-துவலி-மலைக்குப்பெயர், மகமென்பது, யாகம்-ஓர்நட்சத்திரத்துக்கும்பெயர், மாயென்பது, மறைவு-சாவுக்கும்பெயர்-எ-று, (உ)

இகல்பகைவலிபேர்முப்பேரிருளையேகோழிசிங்கமாம்
புகரென்பமழைக்கோள்குற்றம் புற்கெனுநிறமுமுப்பேர்
நகமலையுகிர்மரப்பேர் நகைமகிழ்வொளிசிரிப்பாம்
ககனம்விண்படைகாடென்ப கடவுளேமுனிநன்மைப்பேர்.

(இ-ள்) இகலென்பது, பகை-வலிமை-யுத்தத்துக்கும்பெயர், இருளையென்பது, கோழி சிங்கத்துக்கும்பெயர், புகரென்பது, சுக்கிரன்-குற்றம்-கபிலநிறத்துக்கும்பெயர், நகமென்பது, மலை-நகம்- மரத்துக்கும்பெயர், நகையென்பது, மகிழ்ச்சி பிரகாசம்-சிரிப்புக்கும்பெயர், ககனமென்பது, ஆகாயம்-சேனை-காட்டுக்கும்பெயர், கடவுளென்பது, தெய்வம்-முனிவன்-நன்மைக்கும்பெயர்-எ-று. (௩)

சாகஞ்சாகினிவெள்ளாடு தேக்கெனுங்குருவேதேனீப்
பாகலேகாரவல்லி பலாவென்றுப்பகரலாமே
யூகமேகருங்குரங்கோடு பொருளுணர்தற்றர்க்கம்
நாகம்விண்குரங்குபுன்னை நற்றூசுமலைபாம்பியானை.

(இ-ள்) சாகமென்பது, சிற்கீரை-வெள்ளாடு-தேக்கமரம்- தேனீக்கும்பெயர், பாகலென்பது, பாகல்-பலாமரத்துக்கும்பெயர், யூகமென்பது, கருங்குரங்கு-அகப்பொருளறிதல், தருக்கத்துக்கும்பெயர், நாகமென்பது, ஆகாயம்-குரங்கு-புன்னைமரம்-நல்லாடை- பாம்புயானைக்கும்பெயர்-எ-று. (௪)

திகிரியேமூங்கில்வட்டங் கோருளாழிவெற்பாஞ்
சிகையெனப்படுவதீபந் தீதுறுகேதுவுமேபேர்
ஞெகிழியேசிலம்பிறை செய்யப்புறங்கொள்ளிக்கும்பே
ரெகினமேபுளிமருளி கவரிமா நீர்நாயன்னம்.

(இ-ள்) திகிரியென்பது, மூங்கில்-வட்டவடிவு-தேர்-தேருருளை - சக்கராயுதம்-மலைக்கும்பெயர், ஞெகிழியென்பது, சிலம்பு-செய்யபுறம்- விறகுக்கும்பெயர், எகினமென்பது, புளிமாமரம்-நாய்-கவரிமான்- நீர்நாய் அன்னப்புள்ளுக்கும்பெயர்-எ-று. (௫)

ஆகுவேவெலிபெருமை மாம்பெருச்சாளிக்கும்பேர்
யோகமேதியானங்கூட்ட முபாயமாமுறசிக்குப்பேர்
போகியிந்திரன்பாம்பென்ப போகில்புட்பெயர்ப்பூமொட்டாம்
கோகிலங்குயிலேபல்லிப்பேர் குடங்கைநேருடிகைக்குப்பம்.

(இ-ள்.) ஆகுவெனபது, பெருச்சாளிக்கும்பெயர், யோகமென்பது, தியானம்-கூட்டம்-உபாயம்-உயிர்ச்சிக்குமபெயர், போகியெனபது, தேவேந்திரன்-பாம்புக்கும்பெயர், போகிலமென்பது, பறவைபொது-பூவரும்புக்கும்பெயர், கோகிலமென்பது, குயில்-பல்லிக்குமபெயர், குடங்கரெனபது, குடிசை-குடத்துக்குமபெயர் எ-று. (௬)

பொகுட்டுதாமரைப்பூக்கொட்டைபொருப்புச்சேற்றெழுந்தகொப்பூழ்
இகுத்தலேசெகுத்தல்வீழ்த்தல்விரித்தலோடழைத்தலீதல
புகைக்கிடுநாற்றந்தாமம்போற்றம்போசனைக்குமபேர்
யகைத்தல்வேதனைபொடித்தலறுத்திடலுயர்த்தலாமே.

(இ-ள்) பொகுட்டென்பது, தாமரைக்கொட்டை - மலைசேற்றிலெழுங்குமிழிக்கும்பெயர், இகுத்தலென்பது, கொள்ளுதல் தள்ளுதல்-சாய்த்தல் அழுத்தல்-கொடுத்தலுக்கும்பெயர், புகையென்பது, புகை-யோசனைதூரத்துக்கும்பெயர், அகைத்தலென்பது, வருத்தம்-முறித்தல்-அறுத்தல் உயர்த்தலுக்கும்பெயர் எ-று. (௭)

சிகமேகுடுமிகாமஞ்சிப்புடனுறியுமேற்குங்
கொக்குமாமேசெந்நாய்சாணடமேமூலநாளாம்
வக்கிரங்கொடுமைமீள்படங்குதலுடனேவட்டஞ்
சக்கிரியவன்செக்கான்றராபதிநெடுமாலபாம்பு.

(இ-ள்) சிகமென்பது, குடுமி - சிப்பு-உறிக்கும்பெயர், கொக்கென்பது, மாமரம்-செந்நாய்-கொக்கு- மூலநக்ஷத்திரத்துக்குமபெயர், வக்கிரமென்பது, கொடுமை-மீளுதல்-மடக்குதல்-வட்டத்துக்கும்பெயர், சக்கிரியென்பது, குயவன்செக்கான்-அரசன திருமால் பாம்புக்குமபெயர்-எ-று. (௮)

தூக்கெனப்பாட்டுங்கூத்துந்துலாமுமாராய்தலும்பேர்
பாக்கெனப்பெதிர்காலத்தைப்பகரிடைச்சொற்றுவர்க்காம்
மேக்குமேற்றிசைமேலும்பேர்மெய்யுண்மையுடலுமாமே
யூக்கமேவலியுற்சாகமுள்ளக்கிளர்ச்சிக்குமபேர்.

இ-ள். தூக்கென்பது- செய்யுள் - கூத்து-நிறுபலம்- ஆராய்தலுக்குமபெயர், பாக்கென்பது, எதிர்காலவினைச்சொல்- பாக்குக்கும்பெயர், மேக்கென்பது, மேற்றிசை-மேலுக்குப்பெயர், மெய்யெனபது,நிசம்-சரீரத்துக்குமபெயர், ஊக்கமென்பது, வலிமை-யுற்சாகம்-உள்ளகிளர்ச்சிக்குமபெயர்-எ-று. (௯)

பகடுபம்பெருமையேறுபஃறியாண்மேதியைப்பேர்
தகடிலையமமையெனபதபனனேரவிதீயா
மகடென்பபெடுவேருக்கியருவினன்பகருணைசதகி
மகரந்தங்கள்ளுந்தேனுமலர்த்தாதுமலழுங்குமப்பேர்.

(இ-ள்) பகடென்பது, யானை - பெருமை-எருது-ஓடம் - எருமைக்கடாவுக்கும்பெயர், தகடென்பது, இலை-அச்சவழிவுக்குமபெயர், தபன

னென்பது, சூரியன்-நெருப்புக்கும்பெயர், அகடென்பது, நடுவயிற்றுக்கும்பெயர், அருளென்பது, கிருபை-சிவசத்திக்கும்பெயர், மகரந்தமென்பது, கள் தேன்-பூந்தாதுக்கும்பெயர்-எ-று. (௰)

சகுந்தம்புட்பொதுவீன்பூகஞ்சடையென்பவேணிவேராஞ்
சிகண்டியேபாலையாழினிறத்திசைமயிலொலிப்பேர்
சகுனிபுண்ணிமித்தம்பார்ப்போன்சமமென்பசமமொப்பாகுஞ்
சகுனமேகிழக்குபுள்ளின்சாதியுநிமித்தமும்பேர்.

(இ-ள்) சகுந்தமென்பது, பறவைப்பொது - கழுகுக்கும்பெயர், சடையென்பது, சடைவேருக்கும்பெயர், சிகண்டியென்பது, பாலையாழின்றிறத்தோரிசைமயில் பேடிக்கும்பெயர், சகுனியென்பது, பறவை-சகுனம் பார்ப்பானுக்கும்பெயர், சமமென்பது, யுத்தம்- உவமைக்கும்பெயர், சகுனமென்பது, கிழக்கு-பறவைச்சாதி- சகுனத்துக்கும்பெயர்-எ-று. (௰க)

சக்கரம்பெருமையோர்புட்டரணியேபிறப்புவட்ட
மிக்கசேருநேமியாழிவரையெனவிளம்புமென்பேர்
பக்கம்புட்சிறகுநட்புபகர்திதியருகுமாகு
நக்கனேயருகன்சம்புநிருவாணிநாட்டும்பேர்.

(இ-ள்) சக்கரமென்பது, பெருமை ஓர்பறவை பூமி- பிறப்புவட்டவடிவு சேருநேமி-கடல-மலைக்கும்பெயர், பக்கமென்பது, பறவையினிறகு-சினேகம்-பிரதமைமுதலியதிதி-பக்கத்திற்கும்பெயர், நக்கனென்பது, அருகன்-சிவன்-திகம்பரனுக்கும்பெயர்-எ-று, (௰உ)

பூகமேதிரளைபூகம்புனகமென்பதுநோய்துன்பம்
வாகுவேயழகுதோளாமாசியேமகமோர்மாதம்
பாகமேபிச்சைபங்காம்பயோதரம்புயலேகொங்கை
வாகைபண்பொழுக்கம்வெற்றிதவந்தொழில்வழங்கன்மிக்காம்.

(இ-ள்) பூகமென்பது, திரண்டவடிவு கமுகமரத்துக்கும்பெயர், புனகமென்பது, வியாதி-துன்பத்துக்கும்பெயர், வாகுவென்பது, அழகு-புயத்துக்கும்பெயர், மாசியென்பது-நட்சத்திரம்-ஓர்மாதத்துக்கும்பெயர், பாகமென்பது பிச்சை பங்குக்கும்பெயர், பயோதரமென்பது, மேகம்-முலைக்கும்பெயர், வாகையென்பது, குணம்-ஒழுக்கம்-விசயம்-தவம்-வேலைகொடுத்தல மிகுதிக்கும்பெயர்-எ-று. (௰௩)

நோக்கென்பதழகுபார்வைநுதலெனைபுருவம்நெற்றி
சேக்கையேயிருக்குந்துஞ்சுமிடம்மூலைசிறந்தபாயல்
பூக்கமேகமுகூரென்பபுலிதைகாதிபன்பெயர்ப்பூம்புள்ளா
மார்க்கம்பூமகள்செல்வப்பேறாகுமனைவீரமே.

(இ-ள்) நோக்கென்பது, அழகு-கண்ணுக்கும்பெயர், நுதலென்பது, புருவம்-நெற்றிக்கும்பெயர், சேக்கையென்பது, சிலந்தின்- படுக்கையிடம்-மூலை-பாயலுக்கும்பெயர், பூக்கமென்பது, கமுகமரம் - ஊர்க்கும்

பெயர், பூக்கமென்பது, கமுகமரம்-ஊர்க்கும்பெயர், புலிங்கமென்பது நெருப்புப்பொறி-ஊர்க்குருவிக்கும்பெயர், ஆக்கமென்பது, இலக்குமி செல்வத்துக்கும்பெயர், அறலென்பது, கருமணல் நீருக்கும்பெயர்-எ

சோங்கரகம்விசுங் கவுரியந்திலலையும்பேர்
சாகரந்துயிலொழித்தல் சமுத்திரமிருபேர்சாற்றுங்
காகுளிதவிசுகண்டத்தெழுமொலியிசையுங்காட்டு
மீகைபொன்கொடையிண்டப்பேரிரவியேமலையாதித்தன்.

(இ-ள்) சீகரமென்பது, கரகம்-சாமரம்-துளிக்கும்பெயர், சாகரமென்பது, நித்திரையொழிப்பு-கடலுக்கும்பெயர், காகுளியென்பது, ஆசனம் மிடற்றெழுமோசை-இசைக்கும்பெயர், ஈகையென்பது, பொன்கொடுத்தல்- இண்டங்கொடிக்குப்பெயர், இரவியென்பது, மலை-சூரியனுக்கும்பெயர்-எ-று. ௰௫

தகையென்பதழகுபண்பு தயையொடுபெருமைநாற்பே
ரகியென்பதாவிரும்பாமரிட்டமேகள்ளுக்காக்கை
ககமென்பதன்புபுள்ளாங்கடுத்தலொப்பையம்வேக
மகவல்பாமயிர்க்குரால்கூத் தந்தமேயழகிறென்ப.

(இ-ள்) தகையென்பது, அழகு-குணம்-அன்பு-பேருக்கும்பெயர், அகியென்பது, பாம்பு-இரும்புக்கும்பெயர், அரிட்டமென்பது, கள்காக்கைக்கும்பெயர், ககமென்பது, அன்பு-பறவைக்கும்பெயர், கடுத்தலென்பது, உவமை-சந்தேகம்-சீக்கிரத்துக்கும்பெயர், அகவலென்பது, ஒருபாமயிலொலி-ஆடலுக்கும்பெயர், அந்தமென்பது, அழகுமுடிவுக்கும்பெயர்-எ-று, ௰௬

அக்கென்பவிடைமுரிப்பு மணிசங்குமணியுமாகு
நக்கலேநகையுண்டற்பேர் ஞாட்பமர்பாரங்கூட்ட
மிக்கென்பகரும்புகள்ளா மீரமேகுளிர்ச்சியன்பு
மக்கண்மானுடர்சிறூர்பேர்வளாதலேகொள்ளநீக்கல்.

(இ-ள்) அக்கென்பது, இடபத்தின்-முரிப்பு- சங்குமணிக்கும்பெயர் நக்கலென்பது, சிரிப்பு-புசித்தலுக்கும்பெயர், ஞாட்பென்பது, யுத்தம் பாரம்-கூட்டத்துக்கும்பெயர், இக்கென்பது, கரும்பு-கள்ளுக்குப்பெயர் ஈரமென்பது, குளிர்ச்சி-அன்புக்கும்பெயர், மக்களென்பது, மனிதர்-பிள்ளைகட்கும்பெயர், வளாதலென்பது, கொள்ளுதல்- தள்ளுதலுக்கும்பெயர்-எ-று. ௰௭

கேகயமஞ்ஞையோர்பண்ணசுணமாக்கிளத்துமுப்பேர்
தோகையேமயில்வான்மஞ்ஞை விலங்கின்வால்சொல்லுமுப்பேர்
போகமேபாம்பின்மெய்யும் போகத்தின்விகற்பமாகும்
போகுதனெடுமைநேர்மை போகுதலெனுமுப்பேரே.

(இ-ள்) கேகயமென்பது, மயில்-ஓர்பண்-அசுணப்புள்ளுக்கும்பெயர், தோகையென்பது, மயில்வால்-மயில்- மிருகத்தின் - வாலுக்கும்பெயர்,

போகமென்பது, பாம்பினுடல்-போகத்தின்-வேறு பாட்டுக்கும்பெயர், பொருகலென்பது, நீளம்-நீர்மை-போகுதலுக்கும்பெயர்-எ-று. ௰அ

கைக்கிளையிசைவிகற்ப மொருதலைக்காமமும்பெயர்
சுக்கைதாரகைமாலைப்பேர் சூத்திரம்பொறிநூனூற்பா
வெக்கமேசொரிதலோடு குவிதலுமிருபேரென்ப
மொக்குளேகுமிழிபூவின் முகுளமென்மொழியலாமே.

(இ-ள்) கைக்கிளையென்பது, இராகத்தின்வேறுபாடு-ஒருதலைக்காமத்துக்கும்பெயர், சுக்கையென்பது, நட்சத்திரம்-பூமாலைக்கும்பெயர், சூத்திரமென்பது, இயந்திரம்-பஞ்சுநூல் - இலக்கணச்சூத்திரத்துக்கும்பெயர், எக்கமென்பது, சொரிதல்-குவிதலுக்கும்பெயர், மொக்குளென்பது, நீர்க்குமிழி பூவரும்புக்கும்பெயர்-எ-று. ௰௯

ககரவெதுகை-முற்றிற்று.

---

## ஙகரவெதுகை.

புங்கமேயுயர்ச்சியம்பு பொருமம்பிற்குதைமுப்பேரே
இங்களம்புளிமாசப்பேர் சித்திரேகவன்றச்சன்
கங்கென்பவரம்பின்பக்கங் கருத்தினைபருந்துமாமே
தொங்கலேபீலிக்குஞ்சந் தூக்கொடுதொடுத்தமாலை.

(இ-ள்) புங்கமென்பது, உயர்வு-அம்பு-அம்புக்குதைக்கும்பெயர், இங்களென்பது, சந்திரன்-மாதத்துக்கும்பெயர், சித்திரனென்பது, சித்திரக்காரன்-தச்சனுக்கும்பெயர், கங்கென்பது, வரம்பின்பக்கம்- கருத்தினை-பருந்துக்கும்பெயர், தொங்கலென்பது, பீலிக்குஞ்சம் - தூக்கு-தொடுத்தமாலைக்கும்பெயர் எ-று. (௧)

சங்கமேகணைக்காலோரெண் சவைசங்குபுலவர்நெற்றி
பங்கென்பமுடமேபாகம் பாதியுஞ்சனியுமேற்கும்
வங்கமேவெள்ளிநாவாய் வழுதலையீயமாமே
யங்கணஞ்சேறுமுற்ற மாஞ்சலதாரைக்குப்பேர்.

(இ-ள்) சங்கமென்பது, கணைக்கால்-ஓரிலக்கம்- கூட்டம்-சங்கு புலவர்-நெற்றிக்கும்பெயர், பங்கமென்பது, முடம்-பாதி சனிக்கும்பெயர், வங்கமென்பது, வெள்ளி-மரக்கலம்-வழுதலை-ஈயத்துக்கும்பெயர், அங்கணமென்பது, சேறு-முற்றல்-சலதாரைக்கும்பெயர்-எ-று. (௨)

ஞாங்கர்வேல்பக்கமுன்பு மேலெனநான்குமாகுந்
தூங்கலேதிருத்தம்யானை துயில்சோம்புதாளந்தாழ்தல்
வாங்கலேவளைத்தல்கொள்ளல் வையென்பகூர்மைவைக்கோல்
வேங்கைபொன்புலிமரப்பேர் வீரிக்கம்பூபுட்சாவாம்.

(இ-ள்) ஞாங்கரென்பது, வேலாயுதம்-பக்கம்-முன்பு மேலுக்கும்பெயர், தூங்கலென்பது, கூத்து - யானை-நித்திரை-சோம்பல்- தாளந்தாழ்தலுக்கும்பெயர், வாங்கலென்பது, வளைத்தல்-கொள்ளுதலுக்கும்பெயர்

வேங்கையென்பது, பொன்-புலி-ஓர்மரத்துக்கும்பெயர், வியென்பது
சீக்கம்-மலர்-பறவை-சாவுக்குமபெயர்-எ-று. ௩

மங்குல்காரிருள்விண்முப்பேர்மருந்தமுதொடுமெருந்தாம்
பங்கியேபுறமயிற்குமபகருமாண்மயிர்க்கும்பேரே
மங்கதம்பன்னகந்தோளணியுடன்வசைச்சொல்லாகும்
பங்கமேசேறுதூசுபழுதொடுபின்னமாமே.

(இ-ள்) மங்குலென்பது, மேகம்-இருள்-ஆகாயத்துக்கும்பெயர்,மரு
ந்தென்பது, அமுதம்மருந்துக்குமபெயர், பங்கியென்பது, பிறமயிர்கு
டுமிக்கும்பெயர், அங்கதமென்பது, பாமபு-வாகு-வலயம-வசைச்சொல்
லுக்கும்பெயர், பங்கமென்பது, சேறு-வஸ்திரம்-குற்றம- வேறுபாட்
டுக்கும்பெயர்.எ-று. ௪

அங்கமேயுடலுறுப்பென்பாரங்கங்கட்டிலைப்பேர்
பிங்கலம்பொன்னுமபொன்னினிறத்தையும்பேசலாகும்
கொங்கரோமரத்தின்கோடுபொருப்புயரிலவுமுப்பேர்
பொங்கலேகொதித்தன்மிக்காமபொச்சாப்புமறதிதீதாம்

(இ-ள்) அங்கமென்பது, உடல்-அவயவம்-எலும்பு-வேதாங்கம்-கட்டி
லுக்கும்பெயர், பிங்கலமென்பது, பொன்-பொனனிறத்துக்கும்பெயா
கொங்கரென்பது, மரக்கொம்பு-மலை-இலவமரத்துக்கும்பெயர், பொங்
பொங்கலென்பது, பொங்குதல்-மிகுதிக்தும்பெயர், பொச்சாப்பென்ப
து,மறதிபெ ல்லாங்குக்தும்பெயர்-எ-று. ௫

ஙகரவெதுகை-மூற்றிற்று.

---

சகரவெதுகை.

---

பாசெனமென்பசுற்றம் பாண்டமுங்கலமும்பன்னும்
வாசமேயிருப்பிடம்பூ மணம்புள்ளின்சிறகுதூசான்
கோசமேமதிலுறுப்பான் குறிமுட்டைமுறைபண்டாரங்
தேசிகன்வணிகன்தேசாந்தரிபொடுகுருவுமாமே.

(இ-ள்) பாசனமென்பது, உறவுமாத்திரம் உண்கலத்துக்கும்பெயர்
வாசமென்பது, இருப்பிடம்-பூமணம்-பறவையினிறகு- வஸ்திரத்துக்கு
ம்பெயர், கோசமென்பது, மதிலுறுப்பு-ஆண்குறி-முட்டை - புத்தகம்
பொக்கிஷத்துக்கும்பெயர், தேசிகயென்பது, செட்டி-தேசாந்திரி-குரு
வுக்கும்பெயர்-எ-று. ௬

மூசன்மொய்த்திடல்சாவென்பமுடலையேதிரட்சியுண்டை
கீசகங்குரங்குவேயாங்கேள்நிறமொளியப்பாகும்
வீசலேயெறிதலீவாம்வெம்மையுட்டினம்விரும்பங்
கேசரமகிழ்பூந்தாதாங்கிருட்டியோரீற்றுப்பன்றி.

(இ-ள்) மூசலென்பது, மொய்த்தல்-சாவுக்கும்பெயர், முடலையென்
து, இரண்டவடிவு-உருண்டவடிக்கும்பெயர், கீசகயென்பது குரங்

கு மூங்கிலுக்கும்பெயர், கேழென்பது நிறம்-பிரகாசம்-ஒப்புக்கும்பெயர், வீசலென்பது, எறிதல்-கெடுத்தலுக்கும்பெயர், வெம்மையென்பது, வெப்பம்-ஆசைக்கும்பெயர், கேசரமென்பது, மகிழமரம்-பூந்தாதுக்கும்பெயர், கிருட்டியென்பது, தலையீற்றுப்பசு-பன்றிக்கும்பெயர்-எ

அசிபடைக்கலமேவாளேயவமதிச்சிரிப்புமப்பேர்
நிசியிராமஞ்சள்பொன்னுநீர்புனல்குணம்பூராடம்
பிசியென்பபொய்யுஞ்சோறும்பேசரும்பொருளுமப்பேர்
சுசிகோடைசுத்தந்தீயாஞ்சுடர்விளக்கிரவியங்கி.

(இ-ள்) அசியென்பது, ஆயுதம்-வாள்-அவமதிச்சிரிப்புக்கும்பெயர், நிசியென்பது, இரவு-மஞ்சள்-பொன்னுக்கும்பெயர், நீரென்பது, சலம்பண்பு-பூராடநட்சத்திரத்துக்கும்பெயர், பிசியென்பது, பொய்-சோறு அரும்பொருளுக்கும்பெயர், சுசியென்பது, கோடைகாலம்-சுத்தம்-நெருப்புக்கும்பெயர், சுடரென்பது, விளக்குசூரியன்நெருப்புக்கும்பெயர்.

ஆசென்பவிரைவுகுற்றமற்பமெய்க்கவசநாற்பேர்
காசென்பகோழைகுற்றங்கதிர்விடுமணிமுப்பேரே
ஆசினிபலாவிசேடமாவுரிமரக்காழ்விண்ணும்
தேசிகமழகுநாட்டிற்றிசைச்சொல்லோர்கூத்துச்செம்பொன்.

(இ-ள்) ஆசென்பது, சீக்கிரம்-குற்றம்-சிறுமை-மெய்க்கவசத்துக்கும்பெயர், காசென்பது, கோழை-குற்றம்-இரத்தினத்துக்கும்பெயர், ஆசினியென்பது, ஈரப்பலாமரவுரி-வயிரம் ஆகாயத்துக்கும்பெயர், தேசிகமென்பது, அழகு-ஒளி அவ்வந்நாட்டுச்சொல் - ஓர்கூத்துசெம்பொன்னுக்கும்பெயர்-எ-று.

௪

பச்சையேமரகதந்தோல்பரிமளப்புதன்மால்புந்தி
கச்சையென்பதுதழும்புகயிறேடுகவசமுப்பேர்
செச்சைமைவெட்சிகேய்வைதிகையென்பதிசைசுணங்காம்
இச்சையேபொய்த்தலாகுமிடித்தலஞ்ஞானமுப்பேர்.

(இ-ள்) பச்சையென்பது, மரகதம்-தோல்-ஓர்-வாசனைப்புதல்-திருமால்புதனுக்கும்பெயர், கச்சையென்பது, உடற்றழும்பு-கயிறு-கவசத்துயர், செச்சையென்பது, ஆடு-வெட்சி-சாந்தின்குழம்புக்கும்பெயர், திகையென்பது, திசை - சோமனுக்கும்பெயர், இச்சையென்பது பொய்-தரித்திரம் அறிவில்லாமைக்கும்பெயர்-எ-று.

௫

மச்சமான்மயிரும்பீலிக்குடையும்வெண்குடையுமாகும்
கச்சம்யானைக்கழுத்திற்கயிறளவொடுமரக்கால்
எச்சமேகுறைசேயாகம்இபமென்பமரக்கோடியானை
அச்சமேயசத்தியம்மையஞ்சலிம்மிப்போமே.

(இ-ள்) பிச்சமென்பது, குடுமி பீலிக்குடை-வெள்ளைக்குடைக்குப்பெயர், கச்சமென்பது, யானைக்கழுத்திடுகயிறு-அளவு- மரக்காலுக்கும்பெயர், எச்சமென்பது, குறைவுபுத்திரன் யாகத்துக்குப்பெயர், இபமென்

து, மரக்கொம்பு-யானைக்கும்பெயர், அச்சமென்பது, அகத்திமரம்-அச்சவடிவுக்கும்பெயர்-எ-று. ௯௭

ஆசையேதிசைபொன்னம்பாம்ஆகுலம்வருத்தமோசை
காசையேகாயாநாணல்காமந்தானழகுகாதல
பாசமேகயிறுகூளிபகருசித்தனோயன்பாகும்
தூசெனபதாடையானைப்புரசைதூசிப்படைப்பேர்.

(இ-ள்) ஆசையென்பது, திக்கு-பொன்-இஷ்டத்துக்கும்பெயர், ஆகுலமென்பது, வருத்தம்-சத்தத்துக்கும்பெயர், காசையென்பது, காசஞ்செடி-நாணற்புல்லுக்கும்பெயர், காமமென்பது, அழகு-ஆசைக்கும்பெயர், பாசமென்பது, கயிறு-பிரகாசம்-ஊசித்தொளை-அன்புக்கும்பெய-எ-று. ௯௮

தாசியேபாணிகூளைகளியெனபதுளியேகோயில்
வேசரிகழுதையேகோவேறுவேசரியுமாகும்
ஆசுகம்பகழிகாற்றும்அந்தரியுமையேதுர்க்கை
கோசிகஞ்சாமவேதங்கூறுபட்டாடைக்கும்பேர்.

(இ-ள்) தாசியென்பது, பாணிநட்சத்திரம்-அடியாளுக்கும்பெயர், தளியென்பது துளிகோயிலுக்கும்பெயர், வேசரியென்பது, கழுதை-கோவேறுகழுதைக்கும்பெயர், ஆசுகமென்பது, அம்பு-காற்றுக்கும்பெயர், அந்தரியென்பது, பார்வதி-துர்க்கைக்கும்பெயர், கோசிகமென்பது, சாமவேதம்-பட்டுவஸ்திரத்துக்கும்பெயர்-எ-று. ௯௯

பசுவேறசிவனுவாம்பாரதிவாணிதோணி
வசுவேயான்கன்றுபொன்னும்வசுக்களுந்தீயுநாற்பேர்
அசமூவாண்டுநெல்லாடம்அணைவென்பகளையேமெத்தை
சசியென்பகர்ப்பூரஞ்சந்திரனயிராணிமுப்பேர்.

(இ-ள்) பசுவென்பது, இடபம்- உயிர்-பசுவுக்கும்பெயர், பாரதியென்பது, சரஸ்வதி-தோணிக்கும்பெயர், வசுவென்பது, பசுவின்கன்று-பொன்-தேவர்களிலோர்பிரிவாகிய அஷ்டவசுக்கள்-நெருப்புக்கும்பெயர், அசமென்பது மூன்றுவருடத்துநெல்-ஆட்டுக்கும்பெயர், அணையென்பது, களை-மெத்தைக்கும்பெயர், சசியென்பது, கர்ப்பூரம்-சந்திரன்இந்திராணிக்கும்பெயர்-எ-று. ௱

விசும்பொன்னுலகுமேகம்விண்ணெடுதிசையுநாற்பேர்
தசும்புகற்குடமிடாவாம்சாத்தனேயருகனையன்
இசைபுகழ்கிளவிபாட்டெங்கலேயொலியிரங்கல்
பிசுனனேகோளன்பொய்யன்னிலோபனும்பேசுமுப்பேர்.

(இ-ள்) விசும்பென்பது, தேவலோகம்-மேகம்-ஆகாயம்- திசைக்கும்பெயர், தசும்பென்பது, குடம்-மிடாவுக்கும்பெயர், சாத்தனென்பது, அருகன்-அரிகரபுத்திரனுக்கும்பெயர், இசையென்பது புகழ்-சொல்பாட்டுக்கும்பெயர், எங்கலென்பது, சத்தம்-அழுதலுக்கும்பெயர், பிசுனனென்பது, கோளன்-பொய்யன்-உலுத்தனுக்கும்பெயர்-எ-று. ௱௧

வஞ்சிரஞ்சதுரக்கள்ளிவயிரமேகுலிசமுப்பேர்
கொச்சியேசித்துவாசமதில்சிற்றூர்துவலமாமே
தச்சமேசித்திரைப்பேர்சபதிகன்றூனுமாகும்
உச்சிநண்பகலுச்சிப்பேர்வுறுப்பவயவமுடம்பாம்.

(இ ள்) வச்சிரமென்பது, சதுரக்கள்ளி-வைரம்-வச்சிராயுதத்துக்கும் பெயர், கொச்சியென்பது, கொச்சிச்செடி-மதில்-சிற்றூருக்கும்பெயர், தச்சனென்பது, சித்திரைநட்சத்திரம்-தச்சனுக்கும்பெயர். உச்சியென்பது, நடுப்பகல்-உச்சந்தலைக்கும்பெயர், உறுப்பென்பது, அவ்வுருவம்-சரீரத்துக்கும்பெயர்-எ-று. ௰௧

பாசென்பபசுமைமூங்கில்பப்பென்பபாப்போடொப்பாம்
மாசென்பசிறுமைகுற்றமழைபழுக்கொடுகொற்பேரோ
கேசம்பெண்மயிர்க்குமாண்பான்மயிருக்குங்கிடத்தலாகும்
வாசியேகுழன்மூன்றுண்மாவாசியென்னேவநாற்பேர்.

(இ-ள்) பாவென்பது, பசுமை-மூங்கிலுக்கும்பெயர், பப்பென்பது, பாப்பு-ஒப்புக்கும்பெயர், மாசென்பது, அற்பம்-குற்றம்-மேகம்-அழுக்குக்கும்பெயர், கேசமென்பது-கூந்தல்-குடுமிக்கும்பெயர், வாசியென்பது.பூசைக்குழல்-அச்சுவினி-நட்சத்திரம்-குதிரை-வாசி- யென்னேவலுக்கும்பெயா-எ-று. ௰௨

மிசையென்பதுணவுமேடுமீமிசைச்சொல்லுமுப்பேர்
விசையமேவென்றிவெல்லம்வெங்கதிர்மண்டலப்பேர்
முசலியேயுடும்புதாழைமூந்தியவிராமனேந்தி
வசதிகல்லிடமூர்வீடாவர்ளயன்பரமன்காந்தன்.

(இ-ள்) மிசையென்பது, உணவு-மேடு-மீமிசைச்சொல்லுக்கும்பெயர், விசயமென்பது, வெற்றிலை-வெல்லம்-சூரியமண்டலத்துக்கும்பெயர், முசலியென்பது, உடும்பு-தாழை பலதேவன்-ஓந்திக்கும்பெயர், வசதியென்பது, கல்லிடம்-ஊர்வீட்டுக்குமபெயர்,வரனென்பது, பிரமன் சிவன்-உலைவனுக்கும்பெயர் எ-று. ௰௩

சகரவெதுகை-முற்றிற்று.

---

ஞகரவெதுகை.

---

துஞ்சலேகிலைபேறுகுந்துயில்சோம்புசாவுமாகும்
பஞ்சாஞ்செருந்திகூடாம்பரதரேகழியர்நாய்கர்
கஞ்சமேதாளங்குல்லைகமலம்வெண்பலம்வட்டப்பம்
குஞ்சமீயோட்டிநாடிகுறள்குன்றிகுறளைச்சொல்லே.

(இ-ள்) துஞ்சலென்பது, நிலைபெறுதல்-நித்திரை-சோம்பல்- சாவுக்கும்பெயர், பஞ்சாமென்பது, செருந்திமரம்-கூட்டுக்கும்பெயர், பாத

ரென்பது, நெய்தநிலமாக்கல்-செட்டிகட்கும்பெயர், கஞ்சமென்பதுதாளம்-கஞ்சா-தாமரைவெண்கலம்-அப்பத்துக்கும்பெயர், குஞ்சரமென்பது, ஈயோட்டி-நாழி-குறுமை-குன்றிக்கொடி- குறளைச்சொல்லுக்கும்பெயர்-எ-று. க

நெஞ்சென்பமனமார்பின்பேர்நிழல்செல்வங்குளிர்ச்சிசாயை
மஞ்சபூண்வலிவனப்புமழையானைமுதுகிவ்வைத்தே
வஞ்சமேற்செல்வோரூர்பாவல்லிமென்மருங்குற்பெண்ணும்
தஞ்சமேயெளிமையென்பதருபற்றுக்கோடுமாமே.

(இ-ள்) நெஞ்சென்பது, மனம்-மார்புக்கும்பெயர்-நிழலென்பது, செல்வம்-குளிர்ச்சி-நிழலுக்கும்பெயர்,மஞ்சமென்பது, ஆபரணம்-வலிமை அழகுமேகம்-யானைமுதுகுக்கும்பெயர், வஞ்சியென்பது, பகைவர்மேற்செல்லுதல்-ஓரூர்ஓர்பா-ஓர்கொடி-இடை பெண்ணுக்குப்பெயர், தஞ்சமென்பது, எளிமை-பற்றுக்கோலுக்கும்பெயர்-எ-று. உ

அஞ்சனங்கறுப்புமைதிக்கானையிலொன்றமுப்பேர்
மஞ்சரியேபூங்கொத்துமாலைசெங்களிருமாறும்
அஞ்சலிவணங்கல்வாவற்பறவையுமாகுமென்ப
இஞ்சியேபுரசையிஞ்சிஎறுழென்பவலிகண்டாமே.

(இ-ள்) அஞ்சனமென்பது, கறுப்பு-மை-மேற்றிசையானைக்கும்பெயர், மஞ்சரியென்பது, பூங்கொத்து-பூமாலை-களிருக்கும்பெயர், அஞ்சலியென்பது, கும்பிடல்வாவற்பறவைக்கும்பெயர், இஞ்சையென்பது மதில்-இஞ்சிக்கும்பெயர், எறுழென்பது, வலிமை தண்டாயுதத்துக்கும்பெயர்-எ-று. ௩

கிஞ்சுகமுருக்குஞ்செம்மைகிருட்டினன்றன்மால்பார்த்தன்
கஞ்சனமேகண்ணாடிகரிக்குருவிக்கும்பேரே
பஞ்சமேசிறுமையைந்தாம்பகழியம்பிதன்குதைப்பேர்
வஞ்சனைமாயைபொய்யாம்மயன்மால்கருநிறத்தோன்.

(இ-ள்) கிஞ்சுகமென்பது, முருக்கமரம்சிவப்புக்கும்பெயர், கிருட்டினென்பது, கண்ணன்-அருச்சுனனுக்கும்பெயர்,கஞ்சனமென்பது,கண்ணாடிகரிக்குருவிக்கும்பெயர், பஞ்சமென்பது, சிறுவிலைக்காலம்- ஐந்துக்கும்பெயர், பகழியென்பது,அம்பு-அம்புதைக்கும்பெயர்,வஞ்சனையென்பது, மாயை-பொய்க்கும்பெயர், மாயனென்பது, திருமால்கருநிறத்தோனுக்கும்பெயர்-எ-று. ௪

குஞ்சியாண்மயிர்புட்பார்க்குக்குன்றியின்புதன்முப்பேரே
வஞ்சமேகபடம்வாளாம்மாயும்வஞ்சனைபொய்யென்ப
கஞ்சனைகுறளன்வேதன்களங்கந்தானழுக்குக்குற்றம்
வஞ்சிகைசிவிகையாடைகட்டிடுதிரையுமாமே.

(இ-ள்) குச்சியென்பது-குடுமி பறவைக்குஞ்சி - குன்றிப்புகருக்கும் பெயர், வஞ்சமென்பது, கபடம்-வாளாயுதத்துக்கும்பெயர், மாயமென்பது, வஞ்சனைபொய்க்கும்பெயர், கஞ்சமென்பது, குறியன்-பிரமனுக்கும்பெயர், சளங்கமென்பது, அழுக்குகுற்றத்துக்கும்பெயர், கஞ்சிகையென்பது, தண்டிகைவஸ்திரம்-திரைச்சீலைக்கும்பெயர்-எ-று. ௫

ஞகரவெதுகை-முற்றிற்று.

---

## டகரவெதுகை.

---

கடலைவஞ்சனைபொய்யென்பகடுங்கெயருடக்கமும்பேர்
மடல்பனையேடுபோல்வயயரிதழோர்நூற்கும்பெயர்
படர்வழிநினைப்புநோவாம்பகர்ந்திடில்வீரருக்கும்பேர்
குடநகர்பசுவோர்கூத்துக்கும்பமேகரும்பின்கட்டி.

(இ-ள்) கடலையென்பது-கபடம்-பொய்-அசைவுக்கும்பெயர், மடலென்பது, பனையேடுபோல்வன்-பூவிதழ்-ஓர்பிரபந்தத்துக்கும்பெயர், படரென்பது, வழி-நினைப்பு-துன்பம்-படைவீரருக்கும்பெயர், குடமென்பது, பட்டணம்-பசு ஓர்கூத்து-குடம்-வெல்லக்கட்டிக்கும்பெயர்-எ-று.

மாடமேயுயர்ந்தோடெல்லாம்மழையென்பகுளிர்ச்சிமேகம்
கூடன்மின்மறைவுகொல்லன்சம்மட்டிகுவட்டினுச்சி
சேடனோர்சாதிபக்கன்செகந்தாங்குமணந்தனென்ப
கேடகம்பரிசைவேறோர்கேடிலூர்பலகைமுப்பேர்.

(இ-ள்) மாடமென்பது,உளுந்த-வீட்டுக்கும்பெயர், மழையென்பது குளிர்ச்சி-மேகத்துக்கும்பெயர், கூடமென்பது, வீடு-மறைவு-கொல்லன்-சம்மட்டி-மலையினுச்சிக்கும்பெயர், சேடனென்பது, ஓர்சாதியான்-தோழன்-பூமி-தாக்குமணந்தனென்று பாம்புக்கும்பெயர், கேடகமென்பது, தோற்பலகை-ஊர்க்கேடகத்துக்கும்பெயர்-எ-று. ௨

இடங்கரேமுதலைதூத்தாகுடங்கரிமுப்பேரொன்ப
முடங்கலேமடங்கல்கைகைசமூங்கிளோர்யோலையம்பேர்
படங்குமேற்கட்டியெனபபசர்பேருங்கொடியுமாகும்
விடங்கமேற்கொடிகோடிங்கைமிதவையேதெப்பஞ்சோரம்.

(இ-ள்) இடங்கலென்பது, முதலைவிடர்குடத்துக்கும்பெயர், முடங்கலென்பது, மடங்குதல்-தாழை-மூங்கில்-வியாதி ஓலைக்கும்பெயர், படங்கென்பது, மேற்கட்டிபெருங்கொடிக்கும்பெயர், விடங்கமென்பது, அழுகுதகிற்கொடி-கொடுங்கைக்கும்பெயர், மிதவையென்பது, தெப்பம் சோற்றுக்கும்பெயர்-எ-று. ௩

குடிஞைபுட்பொதுவம்யாறுங்கூகையுமாகுமென்ப
தடிபறலுலக்கைவில்லித்தண்டுமின்றசையுமெய்யாம்

கொடிவளியொருபலப்பேரூழ்த்தகங்கணமுமாகும்
மடியடங்குதேசோம்புவயிறுநோய்புடவைதாழை.

(இ-ள்) குடிஞையென்பது, பறவைப்பொது-நதி-கோட்டானுக்கும் பெயர், கடியென்பது, கலணி உலக்கை-வில்லுதண்டாயுதம் மினலைத சை-உடும்புக்குமபெயர் தொடியென்பது, கைவளை-ஒருபலம்-கங்கணத் திக்கும்பெயர், மடியென்பது, அடங்குதல்-சோம்பல்-வயிறுவியாதிபு டவைதாழைக்கும்பெயர்-எ-று. ௪

படிவமேவடிவநோன்பாம்பந்தமேகிளையுங்கட்டும்
வெடியச்சம்பரிமளிக்குமென்புகைவெளியுமுப்பேர்
துடியலேல்பறைகாலப்பேர் தூக்துாய்தூன்பற்றுக்கோடம்
கொடிருபூசங்குதப்பாம்குரவையேகடலோர்கூத்து.

(இ-ள்) வடிவமென்பது, உருவம்நோம்புக்கும்பெயர், பந்தமென்பது, உறவுகட்டுக்கும்பெயர், வெடியென்பது, பயம்-நறும்பு-கைவெளிக் கும்பெயர், துடியென்பது, ஏலம்குறிஞ்சிப்பாறை - ஓர்காலத்துக்கும் பெயர், தூவென்பது, சுக்கம்-தசை-பற்றுக்கோட்டுக்கும்பெயர்- தொ டியென்பது, பூசநட்சத்திரம்போலத்துக்கும்பெயர், குரவையென்பது, கடல்ஓர்கூத்துக்கும்பெயர்-எ-று. ௫

கடிகைநாழிகையேதுண்டங்ககவிடுதாளமுப்பேர்
படிறுபொய்கடவிரண்டாம்பகர்தலேவிற்றல்பேசல்
கடிகையேபகுடமூச்சிசுட்டியுமிட்டபேரே
இடியிடிப்பேரேனென்மாவேற்றிடுமுறுதிச்சொல்லே.

(இ-ள்) கடிகையென்பது, நாழிகைதுணுக்கை, ககவிடுதாளுக்கும் பெயர், படிறென்பது, பொய்களவுக்கும்பெயர், பகர்தலென்பது, விற்ற ல்பேசலுக்கும்பெயர், கடிகையென்பது, கிரீடம்-நடுச்சுவே -நெற்றிச்சு ட்டிக்கும்பெயர், இடியென்பது, இடிநென்மா - உறுதிச்சொல்லுக்கும் பெயர்-எ-று ௬

நாடிநாசிகைநாம்பாம்நற்கல்கேடடனேயாக்கம்
பாடியேநாடுனுடுபாசறையாயரூப்பேர்
கோடிகர்துகில்பூர்தட்டாம்குடம்பையேமுட்டைகூடு
கோடியென்பதுமைதுசாங்குடுமியேவெற்றியுச்சி.

(இ-ள்) நாடியென்பது, மூக்கு-நாம்புக்கும்பெயர்-நற்கலென்பது-கே டு-ஆக்கத்துக்கும்பெயர், பாடியென்பது, நகரம்-நாடு-முனைமேற்சென் றிருறைவிடம்-ஆயர்பாடிக்கும்பெயர், கோடகையென்பது, வஸ்திர

ம்பூந்தட்டிக்கும்பெயர். குடம்பையென்பது, முட்டைகூட்டுக்கும்பெயர், குடுமியென்பது, பிரமுயம்-உச்சிக்கும்பெயர்-எ-று. ௭

உடுவின்மீன்கிடங்குநாவாயோட்டுங்கோலம்பிலிர்க்காம்
கடுவிடமுள்ளுத்தானேயரிதகுகசப்புநாற்பேர்
படுமரக்கொலையேகள்ளுப்பாவுநீர்நிலைநன்மைப்பேர்
படுதலேயாவியின்றுதல்பசரிலுண்டாதல்பூத்தல்.

(இ-ள்) உடுவென்பது, நட்சத்திரம்- அகழிமரக்கலமோட்டுங்கோல் அம்பினிறகுக்கும்பெயர், கடுவென்பது, நஞ்சுமுள்கடுகமரம்- கசப்புக்கும்பெயர், படுவென்பது, மரக்குலைகள்-குளம்நன்மைக்கும்பெயர், படுதலென்பதுசத்தம், இல்லாமை-உண்டாதல் - பூத்தலுக்கும்பெயர்-எ-

மாடுபொன்பக்கஞ்செல்வம்வைகல்வைகறைநாடங்கள்
சேடென்பபெருமைநன்மைதிரட்சியேயழகுநாற்பேர்
பாடிடம்பெருமைபோசைபட்டேபட்டாடைசிற்றூர்
ஈடென்பதுழைவேயாப்பேவலியொடுபெருமையென்ப.

(இ-ள்) மாடென்பதுபொன்-பக்கம்- செல்வத்துக்கும்பெயர், வைகலென்பது, விடியற்காலம் நாள்-தங்கலுக்கும்பெயர்,சேடென்பது-பெருமை-நன்மை-துன்மை திரண்டவடிவு-அழகுக்கும்பெயர், பாடென்பது, இடம்பெருமை-ஒலிக்கும்பெயர், பட்டென்பது, பட்டுவஸ்திரம் சிற்றூருக்கும்பெயர், ஈடென்பது-நெகிழ்தல்-ஒப்பு-வலிமை-பெருமைக்கும்பெயர்-எ-று, ௯

மடையென்பமதகுசோறுமணிப்பணிக்கடைப்பூட்டும்பேர்
படைபடைக்கலங்கலப்பைபடுக்கைபல்லணமேசானை
இடைநடுவென்பமற்றுமிடப்பெயர்நுசும்புமாமே
மடமறியாமைசத்திரமன்னியமுனிவாகப்பேர்.

(இ-ள்) மடையென்பது, மதகு-சோறு-ஆபரணக் கடைப்பூட்டுக்கும்பெயர், படையென்பது, ஆயுதம்-கலப்பை-நித்திரை- குதிரை-சேணம்-சேனைக்கும்பெயர், இடையென்பது, நடு இடம்-இடைக்கும்பெயர்,மடமென்பது, அறிவின்மை-சத்திரம் - முனிவரிருப்பிடத்துக்கும்பெயர்-எ-று. ௰

வாடையென்பதுதான்வீதிவடகாற்றுத்தானுமாமே
ஆடுமேழகம்வெற்றிப்பேர் அல்கனுட்சுருங்கவைகல்
கோடைமேல்காற்றினோடுகுதிரைவெண்காந்தளென்ப
ஓடைநீர்நிலைகிடங்கேயொளிமணிபபட்டமுப்பேர்.

(இ-ள்) வாடையென்பது, தெருவட காற்றுக்கும்பெயர், ஆடென்பது, ஆடு-வென்றிருக்கும்பெயர். அல்லலென்பது, நாள்-குறைதல்

றைதல் தங்சனுக்கும்பெயர், தோடையென்பது மேல்காற்று குதிரை
வெண்காந்தனுக்கும்பெயர், டையென்பது, தடாகம், அகழி-நெற்றி
ப்பட்டத்துக்கும்பெயர்-எ-று, ௰௧

அடுப்பென்பபாணிநாளேயச்சமேகல்விமுப்பேர்
வடுச்செம்புகமூம்புவண்டாம்மத்தகநெற்றிசென்னி
இடக்கணாமறைத்தவார்த்தைகும்பமுமென்பனாலோர்
கடைப்பிடிமறப்பிலாமைகருதியதோற்றமாமே.

(இ-ள்) அடுப்பென்பது பாணிநட்சத்திரம்,பயம்-அடுப்புக்கும்பெ
ர், வடுவென்பது, செம்புகமூம்வண்டுக்கும்பெயர், மத்தகமென்பது
நெற்றி-தலைக்கும்பெயர், இடக்கரென்பது, மறைத்தசொல்-குடத்துக்
கும்பெயர், கடைப்பிடியென்பது,மறவாமை-தோற்றத்துக்கும்பெயர்-

பட்டமேயோடைதூசபதவிலான்கவரியாமாம்
புட்டமேகாயமாகும்புடவையுங்கிறைவுமப்பே
குட்டமேதோள்நோயாழங்குளமென்பபெயர்மூப்பாற்றே
வட்டமேபரிசைநீர்ச்சால் வலயங்கைம்மணிநாகூர்கோள்.

(இ-ள்) பட்டமென்பது, குளம்-வஸ்திரம்-பதவி-வாள்-கவரி- மாது
க்கும்பெயர், புட்டமென்பது, காக்கை-சீலை-நிறைவிக்கும்பெயர், குட்
டமென்பது, குட்டவியாதி-ஆழம்குளத்துக்கும்பெயர், வட்டமென்ப
து, கேடகம் நீர்ச்சால்-வட்டவடிவு-கைம்மணி-சீலை- பரிவேடத்துக்கும் ௰௨
பெயர்-எ-று,

திட்டையேயுசனுமேடேந்திண்ணையுநண்ணுமுப்பேர்
தட்டைவேய்தினைத்தாள்கிள்ளைதனைக்கடிகோலமுண்டம்
கிட்டியேதலையிற்றுவாங்கிருட்டியந்தாளமுப்பேர்
கட்டளைநிறைகல்லொய்பேயிட்டிகையியற்றலாணி,

(இ-ள்) திட்டையென்பது,உசல்-மேடு-திண்ணைக்கும்பெயர்,தட்டை
யென்பது, மூங்கில்-தினைத்தாள்-கிளிகடி-கோல்-மொட்டைக்கும்பெயர், க
ிட்டியென்பது, தலையிற்றப்பசு-பன்றி-கைத்தாளத்துக்கும்பெயர், க
ட்டளையென்பது, நிறையறிகருவி-உவமை - செங்கலியற்றுங்கருவி-உ ௰௩
ரையரிகருவிக்கும்பெயர்-எ-று.

காட்டங்கண்ஞோர்பண்வாளநாகுசங்கிளமைதந்தை
யோட்டமேனுதடேதோல்வியுயிரொன்பகாற்றேசிவன்
வோட்டங்கோண்படப்பைநாடுகோயிலெல்லையியமான்கொட்டில
கோட்டியங்குசந்தபாடந்துணையென்பதளவுமொக்கும்.

ரு

(இ-ள்) நாட்டமென்பது,கண்-ஓர்-பண்-வாளாயுதத்துக்கும்பெயர்,நாகென்பது, சங்கு-இளமைநத்தைக்கும்பெயர், ஒட்டமென்பது,மேலுதடு-தோற்றத்துக்கும்பெயர், உயிரென்பது, காற்று-சீவனுக்கும்பெயர், கோட்டமென்பது, சோலை-மருதநிலத்தூர்-நாடு-கோயில்- அழுக்காறு-தொழுவத்துக்கும்பெயர், தோட்டியென்பது, யானைத்தோட்டி- கதவுக்கும்பெயர், துணையென்பது, அளவு-ஒப்புக்கும்பெயர்-எ-று. ௰௫

தடமலைபெருமைகோணஞ்சரிகரையகலம்வாவி
யடல்கொலைவலிபேராகுமருத்தமேபொருள்பொன்பாதி
யுடல்பொருளாகமென்பவோங்கல்வெற்புயர்மூங்கில்
விடபமேயிடபார்சிவிடைமரக்கொம்பிழுப்பே.

(இ-ள்) தடமென்பது, மலை-பெருமை-வளைவு-வழி-குளக்கரை-அகலம் குளத்துக்கும்பெயர், அடலென்பது, கொல்லுதல் வல்லமை-யுத்தத்துக்கும்பெயர், அருத்தமென்பது, சொற்பொருள்-பொன்- பாதிக்கும் பெயர், உடலென்பது, பொன்உடலுக்கும்பெயர்,ஓங்கலென்பது, மலை உயர்ச்சி-மூங்கிலுக்கும்பெயர், விடபமென்பது, இடபாசி-இடபம்- மரக்கொம்புக்கும்பெயர்-எ-று. ௰௬

கடகமேசேனைவட்டங்கைவளைமதிற்பேரே
வடகந்தோலத்தவாளம்வலமென்பதிடமேவெற்றி
படுவிகள்விற்பாள்குண்டம்பரமென்பகவசமெய்யாம்
கொடிபிதற்கிளவியாகும்நானநிச்சயமேகுன்றல்.

(இ-ள்) கடகமென்பது, சேனை-வட்டவடிவு-கைவளை-மதிலுக்குப்பெயர், வடகமென்பது, தோல்-உல்லாசத்துக்கும்பெயர்,வலமென்பது,இடம்-வெற்றிக்கும்பெயர்,படுவியென்பது, கள்விற்பவள் வசவிக்கும்பெயர், பரமென்பது, கவசம்-சரீரத்துக்கும்பெயர், கொடியென்பது,கைக்கொடி-சொல்லுக்கும்பெயர், நானமென்பது, நிச்சயம்-குறைதலுக்கும்பெயர்-எ-று. ௰௭

கடங்கயிர்வாக்கதுப்புக்கான்சுரமுடம்புநீதி
குடங்கடாமிம்பானைக்குழாங்கடன்முழவைந்தேழாம்
மடங்கலேசனிசியமறலிநோயுகமூழிதீ
படங்கரிமுகபடாந்துகில்பாம்பின்பணமுப்பேரே.

(இ-ள்) கடமென்பது,கயிறு-யானைக்கவுள்-காடு-அருநெறி-சரீரம்நியாயம்-குடம்-யானை மதம்-கடமை - யானைக்கூட்டம்-கடன்-குடமுழாவுக்கும்பெயர், மடங்கலென்பது, இடி-சிங்கம்-இயமன்-வியாதி-யுகம்- வடவாமுகாக்கினிக்கும்பெயர், படமென்பது, யானைமுகபடாம்-வஸ்திரம்-பாம்பின்படத்துக்கும்பெயர்-எ-று. ௰௮

ஆடலேபெண்ணான்கூடல்வார்த்தைகூத்தாடல்வென்றி
பாடலஞ்சிவப்பினேடுபாதிரிகுதிரைமுப்பேர்
கோடரங்குரங்குசோலைகொம்பொடுகுதிரையாகும்
ஆடவர்புருடர்காமமாமிளையவாக்கும்பேரே.

(இ-ள்) ஆடலென்பது, பெண்ணான்கூடல்-வார்த்தை-கூத்தாடல்வெற்றிக்கும்பெயர், பாடலமென்பது, சிவப்பு-பாதிரிமரம்-குதிரைக்கும்பெயர், கோடரமென்பது, குரங்கு-சோலை-மரக்கொம்பு-குதிரைக்கும்பெயர், ஆடவரென்பது, ஆண்மக்கள்-இளைஞருக்கும்பெயர்-எ-று. ௰௯

கடிமணம்விரைவுகூர்மைகாலம்பேய்விளக்கங்காப்பு
வடிவச்சம்வாசனையும்வரைவும்மிதமேழாறும்
வடுகேசயிர்த்தளராகப்பேர்மருதயாழ்த்திறனுமாமே
வடவைபேகுதிரைபெட்டையுவர்ப்பிடிவடவைத்தீயாம்.

(இ-ள்) கடியென்பது, கலியாணம்-சீக்கிரம்-கூர்மை-காலம்பிசாகம்விளக்கம்-காவல்-அல்குல்-பயம்-வாசனை-சந்தேகம்-நீக்கம்-அதிசயத்துக்கும்பெயர், வடுகென்பது, இந்தளராகம்-மருதயாழ்த்திறத்துக்கும்பெயர் வடவையென்பது, பெண்-குதிரை-பெண்யானை - ஊழித்தீக்கும் பெயர்-எ-று. ௨௰

கோடுசங்கூதுகொம்புமரக்கொம்புவில்லின்கொம்பு
நீடுசெய்வரம்புகுன்றின்முகடுநீர்கரையேழ்பேராம்
மோடுமேடுதரமாகும்முறுவலேநகைத்தற்பல்லாம்
ஆடியேயோர்மாதங்கண்ணாடியுத்திராடமாமே.

(இ-ள்) கோடென்பது, சங்கு-ஊதுகொம்பு-மாக்கொம்பு-மிருகத்தின்கொம்பு-கழனிவரம்பு-மலையினுச்சி-நீர்க்கரைக்கும்பெயர், மோடென்பது, மேடு-வயிற்றுக்கும்பெயர், முறுவலென்பது, சிரித்தல்பல்லுக்கும்பெயர், ஆடியென்பது, ஓர்மாதம்-கண்ணாடி-உத்திராடநட்சத்திரத்துக்கும்பெயர்-எ-று. ௨௧

தட்டுத்தேர்நடுவுகுற்றந்தட்டொடுபரிசைமுட்டாம்
செட்டிவாணிகன்செவ்வேளாம்செப்புரைகாண்டகப்பேர்
மட்டென்பதெல்லைகள்ளாம்மார்க்கமேசமயமாதி
பட்டிகையென்பகச்சுப்பகடுயனிரதமாமே.

(இ-ள்) தட்டென்பது, தேர்-நடுவு-குற்றம்-தட்டு-கேடகம்-விக்கினத்துக்கும்பெயர், செட்டியென்பது, செட்டி-முருகனுக்கும்பெயர், செப்பென்பது, சொல்-காண்டகத்துக்கும்பெயர், மட்டென்பது, எல்லை-கள்ளுக்கும்பெயர், மார்க்கமென்பது, சமயம்-தெருவுக்கும்பெயர், பட்டிகையென்பது, மூலைக்கச்சு-தெப்பம்-அரைஞாணுக்கும்பெயர்-எ-று. ௨௨

கடைமுடிவிடம்வாயிற்பேர்களேபரம்பிணமுடப்பாம்
உடைதுகில்செல்வமென்பவுடுக்கைதண்ணுமைதுகிற்பேர்
அடையிலைகனமேயப்பமடுத்தலசெல்வழியைம்பேராம்
நடைவழியொழுக்கஞ்செல்வம்நாரென்பகயிறன்பாமே.

(இ-ள்) கடையென்பது, முடிவு-இடம்-வாயிலுக்கம்பெயர், களேபரமென்பது, பிரேதம்-சரீரத்துக்குமபெயர், உடையென்பது, வஸ்திரம் செலவத்துக்கும்பெயர், உடுக்கையென்பது, உடுக்கை-வஸ்திரத்துக்குமபெயர், அடையென்பது,இலை-பாரம்-அப்பம்-அடுத்தல்-வழிக்கும்பெயர், நடையென்பது, வழி-ஒழுக்கம்-செல்வத்துக்கும்பெயர், நாரென்பது, கயிறு-இஷ்டத்துக்கும்பெயர்-எ-று. உ௩

விடையெதிர்மொழியுமேறுவிடுத்தலும்விளம்புமுப்பேர்
இடைஇடையுவமைகேட்டிசீதமேயிசையும்வண்டு
படியங்கவடிசேர்பானம்பகைகுணமுவமைபாராம்
குடிகுலம்புருவமூராம்கொடிவல்லிதுவசங்காக்கை.

(இ-ள்) விடையென்பது, எதிர்மொழி-இடபம்-அனுப்பலுக்கும்பெயர், இடையென்பது, இடை-உவமை-கடைக்கும்பெயர், சீதமென்பது, இராகம்-வண்டுக்கும்பெயர், படியென்பது,குதிரையங்கவடி-கற்படி-பகை-பண்பு-ஒப்பு-பூமிக்கும்பெயர்,குடியென்பது,சாதி-புருவம்-ஊருக்கும்பெயர், கொடியென்பது,படர்கொடி-குகிற்கொடி-காக்கைக்கும்பெயர்-எ-று. உ௪

நட்டமேநடனங்கேடாம்நகரென்பமனையுமூரும்
தொட்டலென்பதுவேயுண்டறோண்டல்கைத்திண்டன்முப்பேர்
தட்டலேதடைகிட்டற்பேர்சையொருமாதபூசம்
கட்டலென்பதுதடுத்தல்களைதம்பந்தித்தல்கள்ளல்

(இ-ள்) நட்டமென்பது, கூத்துகேட்டுக்குப்பெயர், நகரென்பது,வீடு-ஊருக்கும்பெயர். தொட்டமென்பது, உண்டல்-தோண்டுதல்-கையாற்றொடுத்தலுக்கும்பெயர், தட்டலென்பது, தடுத்தல்- கிட்டுதலுக்கும் பெயர், சையென்பது, ஓர்மாதம்-பூசநட்சத்திரத்துக்கும்பெயர், கட்டலென்பது, தடுத்தல்-களைதல்-கட்டல்-திருடலுக்கும்பெயர்-எ-று. உ௫

புட்கரநிறைபாண்டமுகந்தீர்த்தம்புனல்வானசேனம்
கட்கம்பல்கயமேயானைக்கைநுனிசருநீரைந்தாம்
வெட்சியென்பதுவேசெச்சையிதுநிரைகவர்தலென்ப
பெட்டென்பபெருமைபன்பாம்பிரசந்தேன்மதுவண்டாமே.

(இ-ள்) புட்கரமென்பது,நிறைவு-பாண்டமுகம்-தீர்த்தம்-நீர்-ஆகாயப்பருந்து-வாளாயுதம்-தாமரை-யானைத்துதிக்கை - நுனி - குருவென்னுமோர் பறவைக்கும்பெ, வெட்சியென்பது, வெட்சி-பூஞ்செடி-பகைஞர்-பசுக்கூட்டத்தைக் கவர்தலுக்கும்பெயர், பெட்டென்பது, பெருமை இஷ்டத்துக்கும்பெயர், பிரசமென்பது, தேன்-கள்-வண்டுக்கும்பெயர்,

அடுதலேபட்டலென்பவடர்தலுங்கொலையுமுப்பேர்
சடிலமேநெருங்கலோடுசடைகுதிரையுமுப்பேர்
படலையேபடாதன்மாலைபதலையேவாசிக்கோவை
குடுகுதேர்வாச்சுற்றினபேர்பரிசைக்குங்கிளத்தலாமே,

(இ-ள்) அடுதலென்பது, தீயிற்பாகமாக்குதல்-நெருக்கல்- கொல்லுதலுக்கும்பெயர், சடிலமென்பது, நெருங்கல்-சடை- குதிரைக்கும்பெயர், படலையென்பது, பரந்தவடிவு-பூமாலை-வாயகன்ற-பறை-குதிரைக் கிண்கிணிமாலைக்கும்பெயர், குடுகென்பது, தேரின்மாச்சாற்று-கேடகத்துக்கும்பெயர்-எ-று. உஎ

படலிகைபிர்க்குவட்டம்பரந்தகைம்மணிபூந்தட்டாங்
கொடியனேகொடியன்கேதாங்குண்டாழந்தாழ்வாண்மாவே
தொடுவென்பமருதம்பூமிதோட்டங்கைதவமுப்பேரே
முடிமயிர்முடியேசென்னிமகுடமுமொழியலாமே,

(இ-ள்) படலிகையென்பது, பிர்க்கு-வட்டவடிவு-கைம்மணி-பூந்தட்டுக்கும்பெயர், கொடியனென்பது, துன்மார்க்கன்-கேதுவெனும்- காம்புக்கும்பெயர், குண்டமென்பது, ஆழம்-தாழ்வு-ஆண்குதிரைக்கும்பெயர், தொடுவென்பது, மருதநிலம்-தோட்டம்-வஞ்சகத்துக்கும்பெயர், முடியென்பது, மயிர்முடி தலை-கிரீடத்துக்கும்பெயர்-எ-று. உஅ

ஆடகந்துவரைபொன்னும்அஞரறிவிலரேதுக்கம்
கோடகமுடியுறுப்புங்குதிரையும்புதுமையும்பேர்
பீடிகையாவணம்பூந்தட்டோடுபீடமுப்பேர்
கோடுபூவிதழேபெண்ணைமடல்போல்வதொகுதிக்கும்பேர்.

(இ-ள்) ஆடகமென்பது, துவரை-பொன்னுக்கும்பெயர், அஞரென்பது, அறிவிலார்-துயரத்துக்கும்பெயர், கோடகமென்பது, முடியுறுப்பு-குதிரை-புதுமைக்கும்பெயர், பீடிகையென்பது, கடைவீதி- பூந்தட்டு ஆசனத்துக்கும்பெயர், தோடென்பது, பூவினிதழ்- பனையேடு-போல்வன்-கூட்டத்துக்கும்பெயர்-எ-று. உகூ

அடரென்பநெருங்குதற்பேரைம்மையின்வடிவமாகும்
விடர்முனியிருப்புத்தூர்த்தர்கமர்வெற்பின்முழைகாடைப்பே
விடலையேதலைவன்பேரும்விறலோன்றன்பேருமாகும்
அடிசெண்டுவெளிதாளரதிகவிதையின்பாதமாமே.

(இ-ள்) அடரென்பது, நெருங்குதல்- அச்சவடிவுக்கும்பெயர், விடரென்பது, முனிவரிருப்பிடம்-தூர்த்தர்-வெடிப்பு-மலைப்பிளப்பு -காட்டுக்கும்பெயர், விடலையென்பது, பாலைநிலத்தலைவன்-வெற்றி- யாளனுக்கும்பெயர், அடியென்பது, குதிரையாளி-வீதி-தால்முதல்-பாட்டினடிக்கும்பெயர்-எ-று. ௩௰

டகரவெதுகை- முற்றிற்று.

---

புணர்வுநோய்க்கிடவிசைப்பாம்பொழில்புவிபெருமைசோலை
உணர்வென்பதெளிவேயூடலொழிகலையறிவுமாகும்
குணமென்பசயிறுபண்புகும்பமவின்ஞாணிநாற்பேர்
கணமுடுநோய்திரட்கோலநுட்பம்பேய்வட்டம்.

(இ-ள்) புணர்வென்பது, கல்வி-இசைப்புல்லுக்கும்பெயர், பொழிலென்பது, பூமி பெருமை-சோலைக்கும்பெயர், உணர்வென்பது, தெளிவு ஊடலொழிதல்-அறிவுக்கும்பெயர், குணமென்பது, கயிறு- குணம்-குடம்-வின்ஞாணிக்கும்பெயர், கணமென்பது, நட்சத்திரம்-ஓர்நோய்- கூட்டம்-காலநுட்பம்-பேய்-வட்டவடிவுக்கும்பெயர்-எ-று. ௧

ஆணமேகுழம்போடன்பாம் அலநாஞ்சிலமையுமாமே
ஓணமாயோனுளாரும்ஊதியமிலாபங்கல்வி
காணமேபரியுண்செக்கோர்கண்ணல்பொற்காசுநாற்பேர்
கோணலேமாறுபாடுங்கூனுமாம்வளைவுமாமே.

(இ-ள்) ஆணமென்பது, குழம்பு இஷ்டத்துக்கும்பெயர், அலமென்பது, கலப்பை-அமையுமென்றலுக்கும்பெயர், ஓணமென்பது, திருவோண-நட்சத்திரம் நதிக்கும்பெயர், ஊதியென்பது, ஆதாயம்- வித்தைக்கும்பெயா, காணமென்பது, குதிரை-யுணவு-செக்கு - ஓர்கட்பிராணி பொற்காசுக்கும்பெயர், கோணலென்பது, மாறுபாடு-கூன்வளைக்கும்பெயர்-எ-று. ௨

குணில்குறுந்தடிப்பாம்குல்லையேதுளவுவெட்சி
மணிநவமணியேகண்டைவனப்பொடுகருமைநன்மை
துணிசோதிநாளேதுண்டம்துளிமழைத்துளிபெண்ணுமை
பிணிமுகமயில்புட்போம்பிசிதநீரிறைச்சிவேம்பு.

(இ-ள்) குணிலென்பது, குறுந்தடி-பறையருக்கும்- குறுந்தடிக்கும் பெயர், குல்லையென்பது, துளசி-வெட்சிப்பூஞ்செடிக்கும்பெயர், மணியென்பது, நவமணி யானை-மணி-அழகு-கருப்பு-நன்மைக்கும்பெயர், துணியென்பது, சோதிநட்சத்திரம்-துண்டத்துக்கும்பெயர், துளியென்பது, மழைத்துளி-பெண்ணுமைக்கும்பெயர், பிணிமுகமென்பது, மயில்-பறவைப்பொதுவுக்குமபெயர், பிசிதமென்பது, நீர்- இறைச்சி - வேம்புக்கும்பெயர்எ-று. ௩

நாணிலச்செம்பேர்தானேகயிறென்றுகாட்டலாகும்
தோணியேகடைநாள்வாக்கந்தொடுகணைதொப்பஞ்சோறு
வாணியேயோர்கூத்தின்பேர்வாக்குநாமகளுமாமே
எணியேயுலகோடெல்லையிறைவைமாவென்றுஞ்சொல்லும்

(இ-ள்) நாணென்பது, வெட்கம்-கயிற்றுக்கும்பெயர், தோணியென்பது, இரேவதி-நட்சத்திரம்-மரக்கலம்-அம்பு-தெப்பம்- சோற்றுக்கும் பெயர், வாணியென்பது, ஓர்கூத்து-சொல்-சரஸ்வதிக்கும்பெயர், எணியென்பது, உலகம்-எல்லை-எணி-மாணுக்கும்பெயர்-எ-று. ௪

திணைநிலங்குலமொழுக்கஞ்செவியென்பகாதுகேள்வி
பிணையாசைவிலங்கின்பெண்பேர் பிலவங்கங்குரங்குதேரை
கணையம்புதிரட்சியும்பேர்காட்சியேகாடுங்கூடும்
பணைவயல்பரியின்பந்திபருத்தல்வேயரசுபீடு.

(இ-ள்) திணையென்பது, பூமிசாதி-நன்னிலைக்கும்பெயர், செவியென்பது, காதுகேள்விக்கும்பெயர், பிணையென்பது, ஆசைபெண்மிருகத்துக்கும்பெயர், பிலவங்கமென்பது, குரங்கு-தேரைக்கும்பெயர், கணையென்பது, அம்பு திரண்டவடிவுக்கும்பெயர், கட்சியென்பது, காடு-பறவைக்-கூட்டுக்கும்பெயர், பணையென்பது, கழனி-குதிரைப்-பந்தி-பருத்தல்-மூங்கில்-அரசமரம்-பெருமைக்கும்பெயர்-எ-று. ௫

யாணரேபுதுமைதச்சரெய்தியவணப்புநன்மை
பாணந்தான்மேகவண்ணக்குறிஞ்சிவெய்கணைபூம்பட்டாம்
சேணென்பதகலநீளஞ்செப்பிடுயரமுப்பேர்
ஆணைமெய்யுடனேவென்றிசூளேவலாதநாற்பேர்.

(இ-ள்) யாணரென்பது, புதுமை-தச்சர்-அழகு-நன்மைக்கும்பெயர், பாணமென்பது, மழைவண்ணக்குறிஞ்சி-அம்பு-பட்டு-வஸ்திரத்துக்கும்பெயர், சேணென்பது, அகலம்-நீளம்-உயரத்துக்கும்பெயர், ஆணையென்பது, உண்மை-வெற்றி-சபதம்-ஏவலுக்கும்பெயர் எ-று. ௬

அண்டமாகாயமுட்டைஅயிலென்பவேலேகூர்மை
துண்டமேசாரைப்பாம்புதுணியொடுவதனமூக்காம்
கண்டமேகவசம்வெல்லங்கழுத்திடுதிரைவாடுண்டம்
முண்டகந்தாமரைகளருமுள்ளரிமத்தகமுண்மூலம்.

(இ-ள்) அண்டமென்பது, ஆகாயம்-முட்டைக்கும்பெயர், அயிலென்பது, வேலாயுதம்-கூர்மைக்கும்பெயர், துண்டமென்பது, சாரைப்பாம்பு-துண்டம் முகம்-மூக்குக்கும்பெயர், கண்டமென்பது, கவசம்-வெல்லம்-கழுத்து-திரைச்சீலை-வாளாயுதம்-துண்டத்துக்கும்பெயர், முண்டகமென்பது, தாழைகள்-தாமரை-நெற்றி-செடிக்கும்பெயர்-எ-று. ()

அண்டரேபகைவர்வானோராயரென்றுகுமுப்பேர்
கண்டகனேசதயநாளுமூஞ்சூறும்வேறுகாட்டும்
கண்டல்கேதகைமுள்ளிப்பேர்கரைதலேவிளித்தலோசை
பண்டமேபொன்பணிகாரப்பேர்பாகுசால்குழம்புபாக்காம்.

(இ-ள்) அண்டரென்பது, பகைவர்-தேவர்-இடையருக்கும்பெயர், கண்டகனென்பது, சதயநட்சத்திரம்-மூஞ்சூறுக்கும்பெயர், கண்டலென்பது, தாழைமுள்ளிச்செடிக்கும்பெயர், கரைதலென்பது, அழைத்தல்-சத்தத்துக்கும்பெயர், பண்டமென்பது, பொன்னம்பல-பண்டத்துக்கும்பெயர், பாகமென்பது, பங்கு-குழம்பு பாம்புக்கும்பெயர்-எ-று, ௮

விண்டென்பயாவேயோன்வெற்புமேகமேமூங்கிற்காற்றும்
தொண்டென்பபழமையென்பான்றொழும்பொடுவழிபாடாமே
தண்டென்பகுழாமேவீணைதடிபடைமிதுனமேந்தி
வண்டென்பசங்குகுற்றம்வளையளிவாளியாம்பேர்.

